வெற்றி எட்டுத் திக்கும் எட்டக் கொட்டு முரசே
வீரர் என்றும் வாழ்க என்று கொட்டு முரசே!





| தொகுதி : க | ஆசிரியர் : ம. பொ. சிவஞானம் | பகுதி க௮ |
| --- | --- | --- |


## பொருளடக்கம்



கதைகளில் வருவன கற்பனைப் பெயர்களே.

விலை 4 அணை 15-9-47

# 'பொறுத்தது போதும்; பிரித்து விடுங்கள்'

அண்மையில் சென்னையில் ஆந்திர மாகாண அரசியல் மாநாடு நடைபெற்றது. ஆண்டுதோறும் கூடும் காங்கிரஸ் மாநாடே இது. எனவே, காந்தீய நெறிப்படியும், காங்கிரஸ் தலைமையினரின் கட்டளைப் படியுமே மாநாடு நடந்திருக்க வேண்டும். ஆனால் நிகழ்ச்சி இதற்கு நேர்விரோதமாக இருந்தது.

மாநாட்டுத் தலைவர் ஊர்வலத்தில் "சென்னப் பட்டணம் மனதே" (சென்னை ஆந்திரருடையதே) என்றும், "குவிட் மெட்ராஸ்" (சென்னையைவிட்டு வெளியேறு) என்றும் கோஷங்கள் கிளம்பின. யாரை வெளியேற்ற இந்தக் கோஷம்? அன்னியரான கவர்னர் நை பிரபுவை அல்ல. நகரைச் சுரண்டும் வடநாட்டாரையும் அல்ல. பண்டுதொட்டு இன்றுவரை சென்னை நகரைத் தங்கள் தாயகத்தின் ஒரு பகுதியாகக் கருதி வாழும் தமிழரை வெளியேற்றவேயாகும்.

ஏதோ ஒன்றிரண்டு ஆந்திரக்காரர்களின் கூக்குரல் அல்ல இவை. ஆந்திர நாட்டு நான்கணு உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பதினுயிரக் கணக்கான காங்கிரஸ் பிரதிநிதிகள்தான் இவ்வாறு கோஷித்தனர். காங்கிரஸ் ஊர்வலத்திலே இனவெறி இவ்வளவு தூரம் தாண்டவமாடியதை இதுவரை நாம் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. அதுவும்

தமிழகத்தின் தலைநகரில் ஆந்திரரின் படையெடுப்பு! தமிழரின் மத்தியில் தமிழரையே அவமதித்து ஆரவாரம்! ஆம். காங்கிரஸின் பெயரால்தான், அறவாழி பொறித்த தேசியக் கொடிபிடித்த கூட்டத்தாரால்தான், தமிழினத்தார் அவமதிக்கப்பட்டனர்; அறைகூவப்பட்டனர்.

ஊர்வலத்திலே கண்ட இந்த இனவெறி மாநாட்டின் தலைவர்கள் பேச்சிலும் தீர்மானங்களிலும் தாண்டவமாடியது. "சென்னையில் எந்த மொழி பேசுவோர் அதிகமென்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. வரலாறுதான் முக்கியம். வரலாற்றுப்படி சென்னை ஆந்திரர்களுடையதுதான்" என்று வம்பளந்தார் திரு. பிரகாசம். "திருப்பதியில் வந்து தமிழர் பிரசாரம் செய்கின்றனர். இவர்களை விட்டேனு பார்! எதிர் நடவடிக்கை எடுக்கும்படி திருப்பதி காங்கிரஸ் கமிட்டிக்கு ஆணையிட்டுவிட்டேன்" என்று தமிழரசுக் கழகத்தை மிரட்டிப் பேசினுர் பேராசிரியர் ரங்கா. இன்னும் இதே மாதிரி மாநாட்டில் பேசிய பலரும் தமிழர்மீது வசை மாரி பொழிந்தனர்.

இத்தனை நாளும் சென்னையை மட்டும் கேட்டு வந்தனர் ஆந்திரர். ஆனுல், இப்பொழுது சேலம், செங்கற்பட்டு, வடஆர்க்காடு ஆகிய ஜில்லாக்களிலும் பங்கு வேண்டுமென தீர்மானம் நிறைவேற்றியுள்ளனர். சுருங்கச் சொன்னுல், தமிழர்மீது கொண்டுள்ள பகைமை, தமிழ் நிலத்தைப் பறிக்க விரும்பும் பேராசை, மாகாணவெறி ஆகிய அனைத்தையும்

ஆந்திர மாநாடு நன்கு அறிவித்துவிட்டது: இதைக் கண்டு நாம் வருந்தினாலும், மனமார வரவேற்கிறோம்; உறங்கிக் கிடக்கும் தமிழருக்கு விழிப்பு ஏற்படும் என்ற ஒரே காரணத்தால்.

சென்னை அரசாங்கத்தின்மீதும் ஆந்திரர் 'நேரடி நடவடிக்கை' மேற்கொண்டுவிட்டனர். 'உணவுப் பொருளை அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டாம்' என்று ஆந்திரத் தலைவர்கள் ஊர்சுற்றிப் பிரசாரம் செய்வதாக ஆந்திர அமைச்சர்களே ஆத்திரப்பட்டனர். இந்தக் குற்றச் சாட்டை ஆந்திர மாநாடு உறுதிப்படுத்திவிட்டது. "உணவுப் பொருளைப் பதுக்கிவைக்கும் பாதகர்கள்மீது பலாத்காரத்தைப் பயன்படுத்தத் தயங்கமாட்டேன்" என்றார் தலைமை அமைச்சர். 'பலாத்காரமா? அதுவும் ஆந்திர மிராசுதாரர்கள்மீதா? பார்க்கிறேன் ஒருகை; பலாத்காரமின்றிப் பதுக்கலைத் தடுக்க முடியாது என்றால் பதவியைவிட்டு வெளியேறட்டும்' என்று ஓமந்தூராருக்கு உத்தரவிடுகிறார், பதவியைப் பறிகொடுத்த பிரகாசம் பந்துலு.

ஆந்திர மாநாட்டினர் தங்கள் தலைவரைவிட ஒருபடி தாவிப்போய், "பதுக்கல்காரர்கள்மீது பலாத்காரத்தைப் பயன்படுத்தினால் சத்தியாக்ரகம் செய்வோம். ஜாக்கிரதை" என்று தீர்மானித்துள்ளனர். ஆம்; கள்வர்களைக் காப்பாற்ற, மக்களைப் பஞ்சத்திற்குப் பலியாக்க, காந்தியடிகளின் சத்தியாக்ரக நெறியைக் கடைபிடிப்பார்களாம்! ஆந்திரர்களின்

இனவெறி மண்டைக்கு ஏறிவிட்டதென்பதற்கு இதைவிட சான்று வேறு என்ன வேண்டும்?

தமிழர் கடமை தெளிவாகிவிட்டது. 'இனியும் ஆந்திரரோடு சேர்ந்து வாழ்வோம்' என்பது தற்கொலை முயற்சி. 'பிரிவினையைப் பற்றிப் பேச வேண்டாம். காலம் வரட்டும். பொறுத்திருங்கள்' என்று தமிழர்க்கு மட்டும் உபதேசம் செய்வது பொறுப்பற்ற பேச்சு. இத்தனை நாளும் பொறுத் திருந்தது போதும். இனி தென்னாட்டிலிருந்து தமிழ் நாட்டைப் பிரித்தே ஆகவேண்டும். ஆந்திரர் ஆக்கிர மிக்கத் துணிந்துள்ள தமிழ்ப் பிரதேசங்களை மீட்கத் திட்டமிட்டு வேலைசெய்து தீரவேண்டும். "சும்மா கேட்கிறார்கள். பயப்படாதீர்கள்" என்று திரு. காம ராஜர்போன்ற பொறுப்புள்ளவர்கள் பேசுவது கடமையிலிருந்து தப்பித்துக்கொள்ளும் தந்திரப் பேச்சாகவே தமிழகம் மதிக்கும்.

'மாகாணப் பிரிவினை மத்திய சர்க்காரைப் பொறுத்தது' என்று கூறி சென்னை மாகாணத் தலைமை அமைச்சர் மௌனம் சாதிப்பதில் பயனில்லை. ஆந்திர நாட்டுக்கு இன்றைய ஓமந்தூரார் ஆட்சி பிரதிநிதித்துவம் வாய்ந்தது அல்ல என்பதை ஆந்திர மாநாட்டின் நிகழ்ச்சிகள் அறிவித்துவிட்டன. அழைப்பு வந்திருந்தும் ஆந்திர அமைச்சர்களில் திரு. கூர்மையாவைத் தவிர வேறு யாரும் மாநாட் டின்முன் முகம்காட்ட முடியாமல் போய்விட்டது. மாநாட்டிற்குச் சென்றிருந்த திரு. கூர்மையாவும்

மிகக் கேவலமான முறையில் அவமதிக்கப்பட்டுள்ளார். மாகாண வெறியர்களுக்குத் தலைமை தாங்கும் திரு. பிரகாசமே அதைத் தடுக்க முயன்றும் முடியாமல் போய்விட்டது. தமிழ் நாட்டு அமைச்சர்கள் ஊர்சுற்றி உணவுப் பொருள்களைச் சேகரிக்கின்றனர். ஆனால் ஆந்திர அமைச்சர்களோ தங்கள் தாயகத்தில் தலைகாட்ட முடியாமல் தவிக்கின்றனர். ஆந்திர காங்கிரஸ் கமிட்டிகள் உணவுப் பொருள்களைச் சேகரிக்க ஒத்துழைக்க மறுப்பதோடு, முட்டுக்கட்டை போடவும் முன்வந்துவிட்டன. இந்நிலையில் ஆந்திர நாட்டிற்கும் ஓமந்தூரார் மந்திரி சபை பிரதிநிதித்வம் வாய்ந்தது என்று கூறுவது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வது மட்டுமல்லாமல், ஆந்திரர்-தமிழர் பகைமை வலுப்படுவதற்கும் வழி செய்வது மாகும். எனவே, சென்னை அரசாங்கத்தார் தாமதமின்றி தென்னாட்டில் மொழிவாரி மாகாணப் பிரிவினையை உடனே செய்ய வேண்டுமென வட நாட்டுத் தலைவர்களை, சிறப்பாக டில்லி அரசாங்கத்ினரை, வற்புறுத்த வேண்டும். அப்படிக்கின்றி 'மாகாணப் பிரிவினை உடனடி பிரச்சனையல்ல' என்று டாக்டர் சுப்பராயன் சென்னைத் தமிழ்இன மாணவர் மாநாட்டில் பேசியது தான் சென்னை அரசாங்கத்தின் கொள்கையென்றால், தற்போது உள்ள அமைச்சர் குழுவினர் மக்கள் மனப்பான்மை எதுவானாலும் 24 ஜில்லாக்களுக்கும் அதிகாரம் செலுத்த விரும்புகிறார்கள் என்றே எண்ண இடம் தரும். மாகாணப் பிரிவினை உணர்ச்சியை ஒடுக்க

டாக்டர் சுப்பராயன் வடநாட்டில் நிகழும் வகுப்பு கலகத்தை மாணவர் மாநாட்டில் எடுத்துக் காட்டினார். நாமும் அதே உவமானத்தைத் திருப்பிச் சொல்கிறோம். இயற்கைக்கு மாறாக, மக்களின் எண்ணத்திற்கு எதிராக, இனியும் ஆந்திரர்—தமிழர் கூட்டாட்சியை வற்புறுத்துபவர்கள் தான் வடநாட்டு நிலைமை தென்னாட்டில் தோன்ற வழி செய்கிறார்கள். இதில் யாதோர் ஐயமும் இல்லை.

---

## படை திரட்டுங்கள்!

சென்னைக் கல்லூரிகளில் படிக்கும் தமிழ்இன மாணவர் மாநாடு இம்மாதம் 5, 6 தேதிகளில் நடைபெற்றதை நண்பர்கள் நன்கறிவர். கட்சி வேற்றுமைகளைக் களைந்தெரிந்து இன உணர்ச்சியால் தமிழ் மாணவர்கள் ஓரே மேடையில் இணைந்து நின்றது இதுதான் முதன் முறையாகும். மாநாட்டில் தமிழ்க்கொடி ஏற்றியதும், தமிழ் நாட்டுப் பிரிவினையை, தமிழினத்தின் சுயநிர்ணய உரிமையை, தமிழகத்தின் எல்லைக் கிளர்ச்சியை, வரவேற்று தீர்மானங்கள் செய்திருப்பதும் பாராட்டத்தக்கது. சென்னையில் நடைபெற்ற இம்மாநாட்டைப் போல் ஜில்லாக்கள்தோறும் கல்லூரி, உயர்நிலைப்பள்ளி மாணவர் மாநாட்டை நடத்தவும் இறுதியில் தமிழக முழுவதற்குமாக மிகப் பெரிய மாநாடு ஒன்றைக் கூட்டவும் சென்னை மாணவர் கழகம் இப்பொழுதிருந்தே முயலவேண்டும்.

தமிழகத்தில் அரசியலார் தமிழுக்கே முதன்மை தந்துள்ளனர்; உயர்நிலைப்பள்ளிகளிலும், கல்லூரிகளிலும்

எல்லா பாடங்களும் தமிழிலேயே கற்பிக்கும் நிலை தோன்றி உள்ளது. எனவே தமிழ் நாட்டில் உள்ள மாணவர் கழகங்களுக்கு 'தமிழ் மாணவர் கழகம்' எனப்பெயரிடுவது சிறு பான்மை உணர்ச்சியை குறிப்பது ஆகாதா என்பதை மாணவர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். வெறும் மாணவர் கழகம் என்றோ, அல்லது வேறு தமிழரது அரசியல் கோரிக்கையைக் குறிக்கும் சொல்லை அடைமொழியாகக் கொண்டோ மாணவர் கழகங்கள் அமைப்பது நல்லதென்பதே நமது கருத்து. வேண்டுமானால் பிறமொழிபடிப்போர், அல்லது பிற இனத்தவர் தாங்கள் விரும்பிக் கற்கும் மொழியின் பெயரை, தங்களுக்குரிய இனப்பெயரை அடைமொழியாகக் கொண்டு சழகங்கள் அமைத்துக் கொள்ளட்டும்.

மற்றும், தமிழ் மொழிக்கு, தமிழ் ஆசிரியர்களுக்கு, தமிழ் மருத்துவர்களுக்கு, தமிழ்ப்பண்பாட்டிற்கும் இன்றுள்ள இழிநிலையைப் போக்குவதற்காக 'மாணவர் தொண்டர் படை' ஒன்றைத்திரட்ட மாணவர் மாநாட்டில் தீர்மானம் நிறைவேறியிருப்பது கண்டு மகிழ்ச்சியடைகிறோம். மேலும், தமிழ் இன மாணவர்களுக்குள்ள குறைகளை மாணவர் உலகத்தோடு மறையவிடாது தமிழகம் எங்கும் பறை சாற்றவேண்டும். ஒவ்வொரு தமிழரையும் உதவிக்கு வருமாறு அறை கூவவேண்டும். ஆனால், தமிழினத்திற்கு உற்ற எல்லாக் குறைகளையும் ஒழிக்கவல்லது சுதந்திரத் தமிழரசு தான் என்பதை மறந்து விடக்கூடாது. அத்தகைய அரசை நிறுவ முன்வந்துள்ள தமிழ்இன மாணவர்களை வரவேற்று வாழ்த்து கூறுகிறோம்!

---

# விடுதலை இந்தியாவுக்கு பாரதியின் செய்தி

'ஞானம்'

ஆகஸ்டு 15ல் நாம் விடுதலை விழா கொண்டாடினோம். அந்த விழாவிலே வெற்றியின் வெறியிருந்ததே யொழிய, வருங்கால வாழ்வின் விளக்கம் காணவில்லை. அதை நினைவூட்டத்தான் விடுதலை விழாவை ஒட்டி, பாரதி விழா வந்ததுபோலும்! பாரதியும் விடுதலை கொண்டாடுகிறார்.

"பறையருக்கும் இங்குதீயர் புலையருக்கும் விடுதலை
பரவரோடு குறவருக்கும் மறவருக்கும் விடுதலை

ஆம்; சமூகத்தின் அடிதளத்திலே சிக்கி அல்லல்படும் பழங்குடி மக்களுடன் கைகோர்த்துக் கூத்தாடி விடுதலையைக் கொண்டாடுகிறார் பாரதியார். அவரது விடுதலைக் களிப்பிலே வருங்கால வாழ்வுக்கான விளக்கமும் இருக்கிறது.

" திறமைகொண்ட தீமையற்ற தொழில்புரிந்து யாவரும்
தேர்ந்தகல்வி ஞானம் எய்தி வாழ்வோம் இந்த நாட்டிலே.,'

சுதந்திர இந்தியாவில் தொழில் சக்தி பெருகவேண்டும். ஆனால், ஆலை ஒழிப்புத் திட்டத்தின் அடிப்படையில் அல்ல, என்பதை நினைவூட்டத்தான் 'திறமை மிக்க தொழில்' என்கிறார் பாரதி. மற்றோரிடத்தில், " ஆலைகள் வைப்போம் கல்விச்சாலைகள் வைப்போம்'' என்றும், "பட்டினி லாடையும் பஞ்சிலுடையும், பண்ணரி மலைகளென வீதி குவிப்போம்'' என்ற வரிகளில் அவர் காணும் "திறமை மிக்க தொழில்'' எது என்பதைத் தெளிவாகக் கூறுகிறார்.

திறமை மிக்க தொழில்மட்டும் போதாது. தீமையற்ற தொழிலாகவும் இருக்கவேண்டும் என்றும் சேர்த்துச்

சொல்லியிருப்பதையும் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்றைய விஞ்ஞானத் துறையில் கண்டு பிடிக்கப்பட்ட திறமை மிக்க தொழில்களில் பல மக்களுக்குத் தீமை பயப்பனவாக முடிந்திருப்பதை யார் மறக்கமுடியும்?

## ஏக இந்தியாவில் இனவாரி அரசுகள்

பாரதியார் ஒன்றுபட்ட இந்தியாவையே விரும்பினார். ஆனால், அதற்கு அவர் காட்டிய வழி வேறு. இன்று நம் தலைவர்கள் கடைப்பிடிக்கும் வழி வேறு. இன்று வடக்கே இந்திய சேனையும் பாகிஸ்தான் படையும் ஒன்றோடொன்று மோதுவதற்கு மோப்பம் பிடித்து நிற்கின்றன. ஏன்? சமய அடிப்படையில் நாடுகளைப் பிரித்த நாச வேலையால்.

பாரதியார் மதத்தை மறந்து இனத்தை எண்ணி நாடுகளைப் பிரிக்கிறார். அரசுகளின் படைகள் தனித்தனி அணி வகுத்து இந்தியாவின் ஒருமையைக் காக்க உறுதி மேற்கொள்வதையும் உணர்த்துகிறார்.

'தாயின் மணிக்கொடி பாரீர்' என்ற பாடலைப் பாருங்கள். செந்தமிழ் நாட்டு மறவர்; சிந்தை துணிந்த தெலுங்கரின் சேனை; பஞ்ச நதி பாயும் பாஞ்சாலப் படையினர்; மாற்றலர் அஞ்சும் மராட்டிய வீரர் என இந்தியாவிலுள்ள பல இனத்தவரின் படைகளும் தனித்தனி அணிவகுத்துத் தாயின் மணிக்கொடியின்கீழ் நிற்பதாகக் கற்பனை செய்கிறார். அவை பகை நாடுகளின் படைகளா? இல்லை. அவை ஒன்றோடொன்று மோதுகின்றனவா? அதுவும் இல்லை. "எங்கள் நல்லுயிர் ஈந்தும் இக்கொடியினைக் காப்போம்" என்று ஒன்றுபட்ட குரலெழுப்பி உலகநாடுகளுக்கு அறிவிக்

கின்றனவாம். பாரதி காணும் இந்தக் காட்சி இந்தியாவில் அமையும் நாள் எந்நாளோ ?

## பெண்ணினத்தின் விடுதலை

நம் இந்திய மக்களின் தாயகம் விடுதலை பெற்றது உண்மை. ஆனால், தாயினமாம் பெண்ணினம் விடுதலை பெற்றதா ? இல்லை. அவர்கள் வாயிருந்தும் ஊமைகள். பெண்ணினம் வாய் பெற்றது அடுப்பூதுவதற்கே ஒழிய அரசியல் பேச அல்ல, என்பதுதான் ஆணினத்தின் தீர்ப்பு. அந்தத் தீர்ப்பைத் தீயிலிட்டுப் பொசுக்கி, பெண்ணினம் செய்யும் உரிமைப் பிரகடனத்தைக் கேளுங்கள்.

பட்டங்களாள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லைகாணென்று கும்மியடி ;

சமூகத்தில் புகுந்த சதிகளை நிலைநிறுத்த, சாமியைத் துணைக்கிழுப்பர் சாத்திரவாதிகள். ஆணினத்திற்குப் பெண்ணினம் அடிமைப்பட்டு அறிவிழந்து நிற்பது ஆண்டவனின் தீர்ப்பென்றும் கூறுவர். பாரதியாரோ பெண்ணினம் பெருமையையிழந்ததற்குக் காரணம் சாமியல்ல, சாத்திரம் பேசும் சழக்கர்களென்கிறார்.

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக் குள்ளே சிலமூடர்—நல்ல
மாதரறிவைக் கெடுத்தார்.

பெண்ணுக்குப் பெருமை தந்தவர் தமிழர். கல்வியைக் கலைமகளென்றும், செல்வத்தைத் திருமகளென்றும் கற்பனை செய்தனர் தமிழ்ப் புலவர்கள். ஆம் ; ஆக்க வழிப்பட்ட

கலைகளை யெல்லாம் அம்மை வடிவில் வணங்கியதே ஆதித் தமிழர் பண்பாடு.

ஆனால், பிற்காலத்தில் இந்தியாவில் குடியேறிய பிற இனத்தவரால், அவர்தம் பேயுறைகளால், பெண்மையின் பெருமை குறைந்தது. உரிமை மறைந்தது. 'அடுப்பூதும் மங்கைக்குப் படிப்பெதற்கு?' என்ற அப்பகுத்தறிவற்றவரின் வாய்மொழி தமிழகத்தின் பழமொழி யாயிற்று. இந்தக் கொடுமை தொலைய தமிழ்ப் பண்பாட்டு வழி நின்று,

மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்

என்று புரட்சி செய்யுமாறு பெண்ணினத்திற்குச் செய்தி யனுப்புகிறார்;

வைய வாழ்வு தன்னிலெந்த வகையினும் நமக்குள்ளே
தாதரென்ற நிலைமை மாறி ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே

என்று ஆணினத்துக்கு அன்போடு அழைப்பு விடுக்குமாறு அறிவுரை கூறுகிறார் பாரதியார்.

ஆணும் பெண்ணும் நிகரெனக் கொண்டிடில்
அறிவிலோங்கியிவ் வையந்தழைக்குமாம்

என்று ஆண், பெண் வேற்றுமை யற்ற சமத்துவம் கொண்ட சமுதாயத்திற்கு வாழ்த்தும் கூறுகிறார்.

### பாவி யார்?

"பறையன் என்போன் கீழ் ஜாதி. ஏனெனில் பண்டு செய்த பாவத்தின் பயனே பறை ஜென்மம். அவனைத் தொடவுங் கூடாது.' இது சாதி வெறியர்களின் சாத்திர வாதம். ஆம், மக்களின் நலனுக்கு எதிரான வாதம்.

ஆனல் 'பாவம்' என்ற சொல்லை மக்களை ஏய்ப்போருக்கு எதிராகப் பயன் படுத்துகிறார் பாரதியார்.

சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்

சாதிக்கோர் நீதிகூறி ஏழை மக்களை இழித்துப் பேசி ஏய்த்துப் பிழைப்பதே பாவம்; அப்படிச் செய்வோரே பாவிகள். அத்தகைய,

பாதகம் செய்பவரைக் கண்டால்—நீ
பயங்கொள்ள லாகாது பாப்பா
மோதி மிதித்துவிடு பாப்பா—அவர்
முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா

என்று சுதந்திர இந்தியாவின் பாப்பாவுக்குச் செய்தி அனுப்புகிறார் சீர்திருத்தக்கவி பாரதி.

இந்தியா ஏகாதிபத்தியக் கொடுமையினின்று மட்டும் தான் விடுதலை பெற்றது. ஆனல் உள்நாட்டுச் சுரண்டல் வாதிகளின்—சுயநல சூழ்ச்சிக்காரர்களின்—கொடுமையிலிருந்து இன்னும் விடுதலை பெறவில்லை. உழுது விதைத்து அறுப்பாருக்கு உணவில்லாக் கொடுமை ஒழியவில்லை. சமயமுள்ள படிக்கெல்லாம் பொய்கூறிப் பிழைக்கும் சதிகாரர் ஆதிக்கம் சாயவில்லை.

## ரஷியப் புரட்சி

சோஷலிஸக் குடியரசுபற்றி பாரதி இயற்றிய பாடலில்,

ஆகாவென் றெழுந்ததுபார் யுகப்புரட்சி
கொடுங்கோலன் அலறி வீழ்ந்தான்

என்று ஜாரின் வீழ்ச்சியைக் கூறிய பாரதி,

..................................இவனைச் சூழ்ந்து
சமயமுள படிக்கெல்லாம் பொய்கூறி
அறங் கொன்று சதிகள் செய்த
சுமடர் சடசட வென்று சரிந்திட்டார்

என்கிறார். ஆம். கொடுங்கோலன் ஜாரின் அரசு அழிந்தது மட்டுமல்ல. அவனது கொடுங்கோலுக்கும் முதலாளி வர்க்கத்தின் கொள்ளை முறைக்கும் தூபம் போட்டுத் துதி பாடிய பொய்யர்களும் பொசுங்கினராம்.

அப் பொய்யருக்கு "அறங்கொன்ற சுமடர்" என்று பாரதி தந்த பட்டம் பொருந்துவதுதானே! தமிழகத்துச் சமயவாதிகளைச் சிந்தையில் கொண்டே பாரதி பாடினர் போலும்.

ருஷியாவில் கண்ட அந்த முழு விடுதலை இன்னும் இந்தியாவுக்குக் கிடைக்கவில்லை. ஏகாதிபத்தியம் காலி செய்த இடத்தில் இந்திய—குறிப்பாக வட இந்திய—முதலாளித்துவம் ஏறிக் கொலுவீற்றிருக்கிறது. இங்கும் சமயமுளபடிக்கெல்லாம் பொய் கூறி அறங் கொல்லும் சுமடர்கள் அதற்குத் துதி பாடுகின்றனர். எனவே, அரசியல்விடுதலை பெற்ற இந்தியா இன்னொரு பொருளாதார விடுதலைப் புரட்சிக்குத்தயாராகி வருகிறது. அந்தப் புரட்சிக்கும் இதேகவி பாடுகிறார் பாரதியார்.

" தனி ஒருவனுக் குணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்"

" உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்—வீணில்
உண்டுகளித் திருப்போரை நிந்தனை செய்வோம்
விழலுக்கு நீர்ப்பாய்ச்சி மாயமாட்டோம்—வெறும்
வீணருக் குழைத் துடலம் ஓய மாட்டோம்"

இதுவே விடுதலை இந்தியாவின் பாட்டாளி மக்களுக்கு பாரதி விடும் செய்தி.

விடுதலைக் களிப்பால் ஆனந்தப் பள்ளுப் பாடிய மறு நாளே, பஞ்சம் மக்களைப் பதம் பார்க்கத் துவங்கிவிட்டது. உணவுப் பொருளைப் பதுக்கிவைக்கும் திருடர்களிடம் பல்லைக்காட்டிக் கெஞ்சுகின்றனர் பாராளும் அமைச்சர்கள். இது 'அநீதி' என்றால், அதுதான் 'அஹிம்சை' என்கின்றனர். அஹிம்சை என்பதின் பொருள் ஆண்டைக்கு அமைச்சர் மண்டியிட்டு மனுப் போடுவதுபோலும்! வயிற்றுக்கு உணவற்ற மக்களைப் பார்த்து "வந்தே மாதரம்" என்று வாய் மணக்கக் கூவுகின்றனர் தேச பக்தர்கள். இந்நிலை கண்டு பாரதி மனமுடைந்து பாடுகிறார்.

"தாயைக் கொல்லும் பஞ்சத்தை
தடுக்க முயற்சி யுறார்
வாயைத்திறந்து சும்மா—கிளியே
வந்தே மாதர மென்பார்"

"பஞ்சத்தும் நோய்களிலும்
பாரதர் புழுக்கள்போல்
துஞ்சத்தம் கண்ணால் கண்டும்—கிளியே
சோம்பிக் கிடப்பாரடி"

வாழப் பிறந்த மக்கள் பசியால் வேதனையுற, உணவுப் பொருளை ஒளித்துவைக்கும் கள்வர்களுக்கு பாரதி அனுப்பும் செய்தி,

"மனிதருணவை மனிதர் பறிக்கும் வழக்கம் இனியுண்டோ.
மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை இனியுண்டோ."

என்பதாகும். ஒளித்து வைக்கும் வழக்கம் ஒருவரிடத்தும்

இல்லை; உற்பத்திக்குறைவுதான் காரணம், என்று ஏய்ப் போருக்கு,

இனிய பொழில்கள் நெடியவயல்கள்
எண்ணரும் பெருநாடு
கனியும் கிழங்கும் தானியங்களும்
கணக்கின்றிதரும் நாடு—நித்த நித்தம்
கணக்கின்றி தரும் நாடு.

என்று நாட்டின் நிலவளத்தை நினைவுறுத்துகின்றார்.

'எல்லாம் சரி; எதிர்கால வாழ்வுக்கு எடுத்து வைக்க வேண்டாமா?' என்று இயம்புவோருக்கு,

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு
வாழும் மனிதரெல் லோர்க்கும்
பயிற்றி உழதுண்டு வாழ்வீர்—பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம்
சிரத்தை யுடையது தெய்வம்—

என்று கூறி இயற்கை அன்னைக்கு உழைப்பு என்னும் காணிக்கை செலுத்தி உயிர் வாழும்படி உபதேசிக்கிறார்.

பாரதி காட்டிய ஆக்க வழியில் சென்று சுதந்திர இந்தியா சுகம் பெறுமாக!



# அவன் கண்ட விடுதலை

போ. குருசாமி.

ஆகஸ்டு மாதம் 14ஆம் நாள் நள்ளிரவு. திடுதிடும் திடுதிடும் என்ற குண்டு முழக்கம். தூக்கம் கலைந்தது. அடுத்த வீட்டிலிருந்து 'சுதந்திர சூரியன் உதிக்கின்ற நேர மிதே—தூங்காதே தமிழா' என்ற கட்டளை இன்னிசை வாயிலாக என்னைத் தட்டி எழுப்பிற்று. 'போகிறான் வெள்ளையன்' என்றது என் மனம். 'வருவது யார்?' என்றது என் அறிவு. 'ஏமாந்தால் என்ன ஆவது' என்று கேட்டது என் தமிழ் நெஞ்சம். போகிறான் என்ற எக்களிப்புச் சுருதியாக, வருவது யார் என்ற வினா இசையாக, ஏமாந்தால்... என்ற அபாய அறிவிப்பு இசையின் உச்ச நிலையாக அமைந்தன. இதய இசை அமைதியைக் குலைத்தது. இன்பம் இன்பம் என்ற ஒரே சுருதியோடு எல்லோரும் எழவேண்டிய ஆகஸ்டு 15ஆம் நாள் காலைப்போது இன்பச் சுவையை வெறும் சுருதியளவிலே, பின்னணிப் பாடல் என்ற அளவிலேதான் எனக்கு அமைத்தது.

ஆகஸ்டு பதினைந்து. பொழுது புலர்ந்தது. எங்கே பார்த்தாலும் புது மலர்ச்சியுற்ற புத்தம்புதிய கொடிகள். மனைதோறும், மாடிதோறும் கொடிகள். வானை முத்தமிடும் மாளிகைகளில், வானவர்கள் குடிகொண்ட கோயில் கோபுரங்களில், கடைகளில்...அங்கு இங்கு எனாதபடி எங்கும் தேசியக்கொடி மயமாய்க் காட்சியளித்தது கோவை நகர். செல்வத்தின் சேமிப்பாய்—தமிழினத்தின் தொழில் நிலையமாய் உள்ள கோவையில் எப்போதுமே கதடைருக்கு ஆதிக்கம் உண்டு. ஆகஸ்டு பதினைந்து—வெள்ளையன் வெளியேறும் நாள்—என்றால் கேட்கவேண்டுமா? வாழ்க்கையே

வாணிகம் என்பது கோவையின் குறிக்கோள். அத்தகைய குறிக்கோளை வளர்க்கும் கடைகளிலெல்லாம்—கடைவீதிகளிலெல்லாம் தேசியக் கொடிகள் பறந்தன. கோவையே அந்த நாளில் தேசியக் கொடிகளாக மாறிவிட்டது என்று சொல்லலாம். கோவைமட்டுமென்ன? இந்தியா அன்று மூவண்ணக்கொடி வண்ணமாகத்தான் காட்சி யளித்திருக்கும்!

விடுதலை என்றால் கடமைகளிலிருந்துகூடவா விடுதலை பெறமுடியும்? எங்கள் கல்லூரியில் விடுதலை விழாவைக் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பெற்றிருந்தன. அங்கே போகவேண்டும். என் இதய இசையின் குழப்பத்தை ஒருவாறு மறந்துபோனதுபோல எண்ணி எழுந்தேன். குளித்தேன். தேசியக்கோலம் பூண்டு கல்லூரிக்குப் புறப்பட்டேன்.

சில்லென்று காற்று அடித்துக்கொண்டிருந்தது. காலை நேரத்தில் குளிர்ந்த காற்று அடிப்பது வழக்கந்தான். அந்த வாடைக்கு நெஞ்சு நடுங்குவதும் இயல்புதான். என்றாலும் ஆகஸ்டு பதினைந்தில் வாடையும் இனிமையாய்விட்டது போலத் தோன்றியது. ஆனால் அவ் வினிமை என்னைப் பொறுத்தவரை நீடித்திருக்கவில்லை. வடக்கே இருந்துவரும் ஒலியையே எப்போதும் வழிகாட்டும் வான்குரல் என்று என்று கொண்டுள்ளவன் இன்றைய தமிழன் என்ற நினைவு எழுந்தது. என்ன இருந்தாலும் வாடை வாடைதானே! அது நடுக்கந்தான் செய்யும். நம் மன எக்களிப்பை வைத்து—விடுதலை பெற்றோம் என்ற மகிழ் நிலையில் வைத்து—வாடையும் நன்று என்று எவ்வாறு கூவமுடியும்? வாடை வாடைதான். தென்றலில் திளைத்த தமிழனுக்கு வாடை

வழிகாட்ட முடியுமா? வாடை வழிகாட்டும் என்று வகை கெட்டு நினைத்தால், தமிழன் அறிவு பேதலித்துவிட்டது என்றல்லவா பொருள்!...

இப்படி எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி யெண்ணி—தமிழன் தென்றலை நாடும் நாள் என்று விடியும், அந்த நாளில் எப்படி உலவுவோம்—என்று பேராசைப் பெரு மாளிகைகள் எழுப்பி—கனவுலகில் சிந்தனை ஒளியால் சூழப் பெற்று நடந்துகொண்டிருந்தேன்.

திடீரென்று கோவையில் அல்லவா இருக்கிறோம் என்ற நினைவு வந்தது. படுபாவி கெடுத்தான்! என்ன அழகான கனவிலே—எதிர்காலத் தமிழகத்தின் நடுவிலே உலவிக் கொண்டிருந்த என்னை—எதற்கெடுத்தாலும் எவனாவது வர வேண்டும் என்று எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாந்து கிடக்கும் இந்தப் பாழான தமிழகத்திலே கொணர்ந்து நிறுத்திவிட்டான். பாவி—படுபாவி......முகத்தைப் பாருங்களேன்—இன்றைய தமிழ் நாட்டின் சரியான பிரதி நிதி!

தரித்திரத்தின் திருவுருவம்......

பாரதியின் வாக்கு நினைவில் எழுந்தது:

பஞ்சமோ பஞ்சமென்றே—நிதம்
பரிதவித்தே உயிர் துடிதுடித்துத்
துஞ்சி மடிகின் றாரே—இவர்
துயர்களைத் தீர்க்க ஓர் வழியில்லையே......

அவனையா பழிப்பது! தரித்திரத்தின் திருவுருவம் என்று அவனையா பழிப்பது! சீச்சி! என்ன கொடுமை

என் தாய்த் திருநாடு தவமிருந்து பெற்ற மகன் அவன் அவனையா பழிப்பது! என்னைப் பழிக்கவேண்டும். அறிஞரைப் பழிக்கவேண்டும்! தலைவர்களைப் பழிக்கவேண்டும்! நாட்டின் அரசியலைப் பழிக்கவேண்டும்! உலகு இவ்வாறு அமைக என்று சட்டம் இயற்றிய ஆட்சியாளரைப் பழிக்க வேண்டும்! அவனையா—நாட்டிலே வாழப் பிறந்து—வாழும் வகையின்மையால் மூடிக் கிடந்த கடைவாசலிலே இரவெல்லாம் தூங்கிக்கிடந்து எழுந்தபின், எங்கே போகலாம் என்ற கேள்விக்கு விடை தெரியாமல் திகைத்துநிற்கும் அவனையா பழிப்பது! தமிழ் நாட்டிலே பிறந்து என்னைப்போலவே வாழுகின்ற ஒரு தமிழனையா பழிப்பது!......

சீச்சீ! இதென்ன நினைவுகள்! விடுதலை மகிழ்ச்சியில் வேண்டாத நினைவுகள்! காந்தியடிகளை எண்ணலாம். ஜவாஹரை நினைக்கலாம். திரு வி. க. வைச் சிந்திக்கலாம் ..இவர்களையெல்லாம் நினைப்பதை விட்டு, தரித்திரத்தின் தனியாட்சிக்கு இடந்தந்து ஏமாந்துவிட்ட ஏழைத் தமிழனையா நினைப்பது—என்று விவாதமிடத் தொடங்கியது, விழாவில் திளைத்துக் கிடந்த மூளையின் ஒரு மூலை.

ஆனால், மூலை முடுக்குகளில் தோன்றும் எண்ணங்கள் அங்கேயே கிடக்கவேண்டியவைதான். கண்முன் நான் கண்ணூரக் கருத்தூன்றிக் காணும் காட்சி அந்த மூலைக்கு ஆதிக்கம் தரவில்லை. மூலைக் கருத்து முடங்கிற்று. காட்சி வளர்ந்தது!

தூங்கினவன் எழுந்தான். சோம்பல் முறித்தான். எழுந்து நின்றான். வில்லாக வளைந்தான். பறந்தது சோம்பல். எதிரேயிருந்த குழாய்க்கு ஓடினான். முகத்தைக்

கழுவினான். சாலையின் ஓரத்திலே கிடந்த ஒரு செங்கல் துண்டு பற்பொடியாயிற்று. பல்லை விளக்கினான். ஒருபிடி வைக்கோல் எங்கிருந்தோ கொண்டுவந்தான். அதுவே அவன் கண்ட சவுக்காரம். தேய்த்துக் குளித்தான். பழைய ஆடையையே கட்டினான். அழுக்கு அதற்குமேல் ஏறமுடியாது. அப்படிப்பட்ட அந்த வேட்டியைக் கட்டும்போதே அவன் முகம் மலர்ந்தது. தன்னை ஒருமுறை பார்த்துக் கொண்டான். மகிழ்ச்சி அவன் நாடி நரம்புகளிலெல்லாம் ஏறிவிட்டதை அவன் கண் ஒளி காட்டிற்று. திடீரென்று தன் வேட்டியை அவிழ்த்து மாற்றிக் கட்டினான். கீழே தொங்கிய பக்கம் இடுப்புக்கும், இடுப்பின்பக்கம் கீழுக்குமாக மாற்றிக் கட்டினான். கீழே தொங்கிய பகுதியில் இருந்த அழுக்கை மறைக்கவே அப்படிச் செய்திருக்கவேண்டும்! ஆனால், இடுப்பிலே எத்தனைநாள் அதே புறத்தைக் கட்டியிருந்தானோ—ஒரேயடியாகச் சுருக்கு விழுந்து கசங்கியிருந்தது. அவனுக்கே அது பொறுக்கவில்லை. குனிந்தான். விளிம்பைப் பிடித்து இழுத்துவிட்டான். நெடுநேரம் இழுத்து இழுத்து விட்டபிறகு நிமிர்ந்து ஒரு பெருமூச்சு விட்டான். அழுக்கால் சிவப்பாய்—மேலும் அழுக்காகிக் கறுப்பாய் மாறிவிட்ட ஒரு ‘வெள்ளை’ச் சட்டையை மாட்டினான். துண்டு என்று மனத்திலே எண்ணிய ஒரு கந்தலை அங்கவஸ்திரமாக அணிந்தான். ஈரத் தலையைத் தட்டிவிட்டுத் தன் கரமே சீப்பாக—கருத்தே கண்ணாடியாகத் தலையை ஒதுக்கிவிட்டான். சிற்றுண்டிச் சாலையின் வாயிலிலிருந்து இந்த நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த என்னைப் பார்த்துவிட்டான். என்னைப் பார்த்து அவன் முகம் ஏன் மலரவேண்டும்?

என்னிடம் ஓடிவந்தான். குழைந்து நின்றான்.

“ஐயா .........”

.........அலட்சியமாகக் கடைக்கண்ணால் பார்த்தேன். இதழ்களின் ஒரு கடைசியில் மலர்ச்சி ஏளனமாக மலர்ந்தது. நானே அதை உணர்ந்தேன்.

“ஐயா...தம்பி!...உங்களைத்தானே!”

ஏதடா இது! ஐயா என்கிறான். தம்பி என்கிறான்...!

“என்னப்பா’ என்ன வேண்டும்?

“இரண்டு கொடி வைத்திருக்கிறீர்களே! ஒன்று கொடுக்கக்கூடாதா? எல்லாரும் கொடிபோட்டிருக்கிறார்களே! நானும் ஒன்று போட்டுக்கொள்ளக்கூடாதா? சுதந்திர விழாவாமே......”

அட பாவமே! இவ்வளவுநேரம் நடந்ததெல்லாம் சுதந்திர நாடகத்துக்கு ஒத்திகையா! சரிதான்...

சட்டையில் நான் அணிந்திருந்த இரண்டு தேசியக் கொடிகளின் வாயிலாக என் மகிழ்ச்சி தன்னை விளம்பரப் படுத்திக்கொண்டிருந்தது. அவற்றுள் ஒன்றுதான் அவனுக்கு வேண்டுமாம்?...நல்லவேளை! காசு கீசு கேளாமல் இருந்தானே......

ஒன்றை எடுத்துக் கொடுத்தேன். அடேயப்பா! பல் முப்பத்திரண்டுதான்!......

தன் மார்பில் தேசியக் கொடியைக் குத்திக்கொண்டான். வலக்கையால் ஏழெட்டுத்தடவை அந்தக் கொடியை மெதுவாக அமுக்கி அமுக்கிப் பிடித்தான். பிறகு நிமிர்ந்து பெருமையாக என்னைப் பார்த்தான். நடந்தான்.

என்னுடைய இதழ்களின் இடக் கடைசி மேல்நோக்கி வளைந்தது: அவன் மகிழ்ந்தது கண்டு எனக்கு எளனம்! எனக்குமட்டுமென்ன! சமூகமே அவனைக் கேலி செய்தது! விடுதலை அவனுக்கா! பேதை!

"அட, ஏழைத் தமிழா! நமக்கா சுதந்திரம்! அரியாசனத்தில் அமர்பவர் மாறினர். அவ்வளவுதானடா! ஆட்சி மாறியது. அவ்வளவுதான். அதுவே சுதந்திரம்......" என்று என் இதயம் உபதேச காண்டம் படித்தது.

இந்த ஏழைத் தமிழனை எண்ணிக் கொண்டே கல்லூரிக்குச் சென்றேன். எத்தனை லட்சம் ஏழைத் தமிழர்கள் இவனைப் போல விடுதலை விழாக் கொண்டாடுகிறார்களோ என்று எண்ணிக்கொண்டே சென்றேன். அவன் வேட்டியின் விளிம்பை இழுத்து இழுத்து விட்டகாட்சி மீண்டும் மீண்டும் என் முன் வந்து நின்றது. 'அட. ஏழைத் தமிழா இது தானா நீ கண்ட விடுதலை' என்று கேட்டது என் தமிழ் நெஞ்சம். கல்லூரிக்குள் நுழைந்தேன்.

விடுதலை! விடுதலை!! விடுதலை!!!

என்று மாணவர் பாடிய பாரதி பாடல் என்னை வரவேற்றது.



# தமிழரசு காண்போம்!

வா. சே. குலோத்துங்கன்

(1) வளஞ்செய்யும் வாணிபத்தை, அயல்நாட் டார்பால்
வளர்க்கின்ற பேருறவை, வரிச்செல் வத்தைக்
களம்அமைக்கும் பெருவலியைத் தமிழர் இன்பக்
கனவுகளைக் கல்லறைக்கும் கடுஞ்சிறைக்கும்
உளம்வெதும்பிச் சென்றுபெற்ற உயர்வை, நம்மோர்
உள்ளத்தின் இன்னிசையை, வடநாட் டார்பால்
புலனின்றித் தந்துவிட்டோம்! எமாந் தோம்நாம்!
புதுவிலங்கை "விடுதலைப்பொன்" கொண்டு செய்தோம்!

(2) மறத்தமிழன் செக்கிழுத்துச் சிறையில் வெந்தான்.
மலையருவி போற்குருதி வழிய, மண்ணில்
அறத்திலுயர் தாயகத்தின் மடியில் சோர்ந்து
அழிவில்லா உறக்கத்தில் குமரன் வீழ்ந்தான்
உறக்கமின்றி ஊணின்றிச் சிறையில் தூக்கில்
உயிர்விட்டார்! பிறநாட்டில் உழன்றார் பல்லோர்!
மறுத்தலுண்டோ? பட்டதுன்பம் சிறிதோ? யாவும்
வடநாட்டார்க் கடிமைகளாய் மடியத் தானோ?

(3) செந்தமிழின் ஆங்கிலத்துக் குயர்வா? பெற்ற
திருநாட்டின் பொற்கரத்தில் விலங்கா? என்று
வெந்தெழுந்தோம்! போரிட்டோம்! மதிக்க வொண்ணா
விலைதந்து வெற்றிபெற்றோம்! ஆனால் இன்றோ
இந்தியினை வரவேற்றோம்! அரசு தந்தோம்!
இன்றமிழை, தீங்கனியை இழந்தோம்! கொன்றோம்!
செந்தமிழே! என்னுயிரே! உனக்கா இந்தத்
தீங்கு? பண்டைப் பேரினமே தீர்ந்த தந்தோ?

(4) கடலுண்டு முப்புறத்தில். இயற்கை தந்த
களஞ்சியங்கள் பலவுண்டு. களிற்றை யஞ்சா
அடல்மிக்கத் தோளுண்டு! மலைக ளுண்டு!
யாற்றுவளம் மணிக்குலங்கள் யாவு முண்டு!
புடமிட்ட பொன்மேனி மடவார் மூரல்
பொலன்இதழ்த்தேன் வெல்"தமிழாம்" புதையல் உண்டு!
கடன் ஒன்று "தமிழரசு" காணல். ஆங்கே
கனவெல்லாம் நனவாகும்! கனியும் இன்பம்!!

# சென்னை நாகரிகம்

(15-8-47 இதழின் தொடர்ச்சி)

தே. போ. மீனாட்சிசுந்தரனார்

## கப்பலோட்டிய நாகரிகம்

சென்னை இன்று பெரிய துறைமுகமாக விளங்குகிறது. கலங்கரை விளக்கம் காரிருளில் காலம் எல்லாம் களிப்புடன் சுழன்று சுழன்று கப்பல்களை 'வா' என்று கண்ணாலும், கையாலும் அழைத்துக்கொண்டே இருக்கிறது. பொருள்கள் கப்பலேறிக்கடலுழுது வருகின்றன; போகின்றன. பல வகை மக்கள்; பலவகைப் பேச்சு; பலவகை நடை; பலவகை உடை பலவகைப் பணம்; ஆந்திர நண்பர்கள் இதனைக் கண்டு மயங்கித் தங்கள் விசாகபட்டணத்தின் பெருமையையும் மறந்து இதனைக் கைப்பற்ற முயலுவதில் வியப்பொன்றும் இல்லை.

"கப்பலோட்டிய தமிழன்" எனச் சிதம்பரம்பிள்ளையை விடுதலை வீரத் திருநாளில் நினைந்து நினைந்துருகிப் போற்றினோம். "கப்பலோட்டிய தமிழன்" என்பதே எந்த நாளிலும் தமிழனது தனிச் சிறப்பு. Rice என்ற சொல்லை மேனாட்டிற்குச் சோறாட்டிக் கற்றுக் கொடுக்க 2000 ஆண்டுகளுக்கு முன் கப்பலில் அரிசி ஏற்றிச் சென்றவன் "அரிசி" எனப் பேசும் தமிழனே. எகிப்து நாட்டில் உள்ள பட்டடைக் கோபுரங்களில் உள்ளிருக்கும் தமிழ் நாட்டுத் தேக்கினைக் கப்பலில் ஏற்றிச் சென்று ஊற்றம் கொடுத்தவன் தமிழனே. கிழக்கிந்தியத் தீவுகளில் கப்பலிற் சென்று பழகியவனும் தமிழனே. தமிழ் நாடு அத்தீவுகளிலும் செங்கோல் செலுத்த வழிகோலியவனும் தமிழனே. "கடல் சூழ்ந்த

உலகெல்லாம் காக்கின்ற பெருமான் கழற்சிங்கள்" என்று சுந்தரர் பாடிய கடலரசர் பெருமான் ஒருபல்லவன். பல்லவர் அருவ நாட்டுப் பெருமக்கள் என முன் கண்டோமாதலின், கழற்சிங்கன் சென்னை நாகரிகத்தை வளர்த்த அருவனும் தமிழனே ஆம்.

அரிக்காமேடு புதுவைக்கருகே யவனர் குடியாக விளங்கியது எனக் கண்டோம். கடலரையர்களான அருவா நாட்டாரோடு யவனர் நட்புப் பாராட்டியது இயற்கையே ஆம். எயிற்பட்டினம் என மற்றொரு துறைமுகத்தினைபற்றிச் சங்கநூல்கள் கூறுகின்றன. இது புதுவையா? அரிக்காமேடா? சதுரங்கபட்டணமா? இந்த ஊர்கள் இருக்குமிடத்தேதான் எங்கேயோ அந்த எயிற்பட்டினம் இருத்தல் வேண்டும். மாமல்லை என்பது பல்லவரது மற்றொரு துறைமுகம், இதுவே பின்னாளில் மஹாபலிபுரம் எனச் சிறந்தோங்கியது. இடைக்கழிநாடு உள்ளூர்களிடையே கழிவழியே படகோட்டி வாழ இடந்தந்தது. திருஇடந்தை, திருவான்மியூர், திருமயிலை, திருஒற்றியூர் என்பவை திருமல்லையைத் தொடர்ந்து கடலருகே விளங்குகின்றன. இந்தக் கோயில்களின் அமைப்பினை நோக்கும்போது, கடலருகே அருவநாட்டுப் பெருவழி ஒன்று அந்நாளில் இந்த ஊர்கள் வழியே கடலை ஒட்டி ஓடியது என்பது விளங்குகிறது. கடலருகாக அருவர் அருவநாட்டில் பரந்து சென்று வந்தனர் போலும்.

கடலருகே வாழவந்த காடுவெட்டிகள் கடலுழுது கப்பலோட்டி வாழ முற்பட்டது அவர்களது இரண்டாம் திருவிளையாடல் எனலாம். திரைகடலோடித் திரை மீது தவழ்ந்து விளையாடிய இந்த மறவர்கள் திரையர் எனப் பேர் பெற்றனர். தொண்டையர் பல்லவர், காடு வெட்டி, காட

வர், திரையர் என்று அருவநாட்டுப் பெருமக்கள் பல பேர் பெறுவர். அருவர் நாடே திரையர் நாடு; அருவர் நாடே தொண்டை நாடு. தொண்டை நாட்டுக் காட்டின் செழுமை யையும், கடலின் கொழுமையையும் கண்டு சோழப் பெரு மக்கள் காதலித்தனர் என முன்னர்க் கண்டோம். சோழர் திரையரோடு கொண்டும் கொடுத்தும் வாழத் தொடங் கினர். நாளடைவில் தொண்டையர் தம்மைச் சோழர் என்றே எண்ணலாயினர். திரையருக்குக் கிழக்கிந்தியத்தீவு களில் வாழ்ந்த நாகருடைய தொடர்பும் உண்டு. புலரோடும் கலந்து வாழும் பண்பாடு அருவாநாட்டாரோடு கூடப்பிறந் ததாகும். இளந்திரையன், காஞ்சிமா நகரில் ஆண்ட பெருமை யைப் பெரும் பாணாற்றுப்படை பாடுகிறது. திரையர் சிறப் பினையும், வேங்கடத்தின் நின்றும் பரவிய தொண்டையர் கொடையினையும் சங்கப் புலவர் மறவாது போற்றிப் புகழ்ந்துள்ளனர்.

பல்லவனுக்கு மயிலைக்கோன் என்பது ஒரு சிறப்புப் பெயர். இது மல்லைகோன் என்பது போலப் போற்றப் பெறும் ஒரு பெயர். மல்லை என்ற மஹாபலிபுரமே, பல்ல வரது தலைநகரமான காஞ்சியின் துறைமுகம் எனக் கி. பி. ஆறுவது நூற்றுண்டின் முற்பகுதியில் இங்கு வந்து சென்ற ஹியூன் சாங் என்ற சீனப்பெரியார் எழுதி வைத்துள்ளார். பல்லவர் வடக்கிருந்து தென்பகுதியிற் சென்றனராம். அரு வர் நாடு இருபகுதியாய்ப் பழம் பகுதி என்றும் புதுப்பகுதி என்றும் பிரியும். பழம்பகுதியின் தலைநகர் மயிலையும், புதுப் பகுதியின் தலைநகர் மல்லையோடு சேர்ந்த காஞ்சியும் எனக் கூறலாம். துறைமுகம் நாட்டிற்கு வாயிலே போல விளங் கியதாலேயே பல்லவனைத் துறைமுகங்களை ஒட்டி மயிலைக்

கோன், மல்லைக் கோன் எனப் புகழவந்தனர் எனத் தோன்று கிறது.

பல்லவர் சிறந்தது சங்காலத்திற்குப் பின்னரே எனலாம். அவர்கள் ஓ என வாழ ஓங்கியது 6-ம் நூற்றுண்டிலிருந்தே ஆகும். இந்தப் பல்லவர் காலத்திற்கு முன்னும் சென்னை சிறந்திருந்தது என்று அறுதிகூற இடம் உண்டு. இங்கே மயிலாப்பூர் எனவழங்கும் மயிலை அன்றும் பெருமை பெற்றுத் திகழ்ந்தது. குறைந்தது கி. பி. இரண்டாவது நூற்றுண்டிலேனும் அதன் பெருமை மேனுடுவரை எட்டியிருந்தது என்று கூறவேண்டும். டாலமி (Ptolemy) என்பவர் அந்த நூற்றுண்டில் வாழ்ந்த யவன பூகோள ஆசிரியர். தாம் எழுதிய உலகப் படத்தில் அவர் மயிலையைக் குறித்து வைத்துள்ளார் என அறிஞர்கள் கருதுகின்றனர். இப்போது சென்னை இருக்கும் இடத்தில் அவர் தம் படத்தில் "மல்லியர்பா" என்ற பெயரை ஒரு துறைமுகத்தின் பெயராகக் எழுதி வைத்துள்ளார். "ம் அ(ல்)ல் இய் அர்ப்ஆ" என்ற எழுத்துக்களை "ம் அய் இல் ஆப் ஊர்" என இடம் மாற்றி எழுதியதும் இந்நாளைய மயிலா(ப்)பூர் என்ற பெயர் வருவது ஒரு வியப்பே. கடைசியில் ஊர் என்பது யவனர் காதில் "ஆ" என விழுந்திருத்தல் வேண்டும். உற்றுக் கேளாமையாலும், மொழியை அறியாமையாலும் நேர்ந்த எழுத்துப் பிறழ்ச்சியே இது என்பது தெளிவாகிறது. தரங்கம்பாடி ட்ராங்கபார் எனத் தமிழறிந்தார் வாயிலும் புரளும் போது, யனவர் அந்நாளில் எழுத்துப் புரட்டி எழுதியது பெரிய தவருகாது.

இந்த மயிலாப்பூர் மற்றொரு வகையிலும் மேனுட்டில் புகழ் பெற்றுள்ளது. ஏசுநாதரின் அடியாரான செந்தோம்

என்ற தோம் ஐயர் அடிகளார் இந்தியாவிற்கு வந்து தம் அறவுரைகளை இந்தச் சென்னை மக்களிடையே வழங்கினராம். ஸென்தோம் என்ற தோம் ஐயர் கோவில் இதனை இன்றும் நினைப்பூட்டுகின்றதாம். மயிலையில் அன்றோ, தோமையர் கோயில் இன்றும் கடலருகே நின்று நிலவுகிறது? பகைவர் கையில் சிக்கித் தோமையர் உயிர் விட்டுச் சமாதி கூடிய இடங்களும் இதற்கு அருகே உள்ளன. பரங்கிமலையைச் சார்ந்த சிறுமலையும் பெருமலையும் தோமையர் கோவிலுக்குப் பெருந் தொலைவில் இல்லை. இவையே அப்பெரியார் சமாதி கூடிய இடம் எனக் கிறித்தவர்கள் இன்றும் காட்டி, ஆண்டுதோறும் திருவிழாக் கொண்டாடி அடிகளார் நினைவை நிலைநாட்டி வருகின்றார்கள். இது உண்மையானால், கிறித்து பெருமான் பிறந்த முதல் நூற்றாண்டிலேயே மேனாட்டோடும், மேனாடும் அன்று உண்மையறியாது மயங்கிய கிறித்துவ அறவுலகோடும் சென்னைக்குத் தொடர்புண்டாகியது எனலாம். தோமையர் இவ்வாறு இங்கு வந்தது அருவநாட்டுத் துறைமுகப் பெருவாய் திறந்து கிடந்தமையாலேயாம். அடையாத பெருங்கதவம் அருவநாட்டின் அழியாத பெருமையாகும். உலகப் பெருவழியாகச் சென்னை விளங்குவது இன்று நேற்று அன்று; இராண்டாயிரமாண்டுகளாக எனல் வேண்டும்.

மயிலாப்பூரில் "லஜ் சர்ச்" என்று ஓரிடத்தினை வண்டியில் ஏறிச்செல்வோர் அனைவரும் அறிவர். 'லஜ்' என்றால் ஒளி என்று பொருள்; ஆதலின் அது ஒளியம்மைத்திருக்கோயிலாகும். மேனாட்டார் சில பல நூற்றாண்டுகளுக்கு முன்னர்க் கீழ்க் கடலில் கப்பலோட்டி வந்த போது திசையரியாது திகைத்தனராம். அப்போது இங்கிருந்து ஒரு பேரொளி

தோன்றியதாம். அதனைக் கண்டு கரை சேர்ந்து பிழைத்தனராம்; ஒளி தோன்றிய இடத்தில் ஒரு கோயில் ஒளியம்மைத் தாய்க்கு எழுப்பித்தனராம். கலம் கரைவிளக்கம் சென்னையில் இன்றன்று ஒளிர்வது. கடவுள் தாயின் கருணை விளக்காகக் காலங்காலமாக ஒளிர்ந்து வருகிறது என்பதாயிற்று. கீழ்க்கடலில் செல்லும் கப்பலைக் காக்க அன்றோ, மணிமேகலைத் தெய்வமும் அருவரோடு தொடர்புடைய நாகரது வழிபடு கடவுளாய்த் தமிழ்க் கடவுளாயிற்று.



# மாணவருக்கு அழைப்பு

சிதம்பரம்

[கடந்த 6-7-47-ல் சென்னை அரசாங்க மாளிகையிலே நடைபெற்ற சென்னை மாணவர் மகாநாட்டின் வரவேற்புத் தலைவர் திரு. சிதம்பரம் அவர்களின் வரவேற்புரை :—]

தலைவர் அவர்களே !

மாணவ அன்பர்களே !!

'தமிழர்' என்னும் இனப் பெயருடன் கூடும் முதல் மாணவர் மாநாடு இதுதான். இதுவரை அரசியல் போக்கில் பல்வேறு குழுவினராகப் பிரிந்திருந்த—ஓரளவு பிணக்கம் கூட கொண்டிருந்த நாம், இன்று இன உணர்ச்சியால் கட்டுண்டு ஒரு தாயின் வயிற்று மக்கள் போல் ஒன்றுபட்டுக் கூடியுள்ளோம்.

இனவெழுச்சிக் கோஷங்கள் இந்தியாவெங்கும் எழுந்து விட்டன. வடக்கே மராட்டியர் பண்டைய மராட்டிய நாட்டை உருவாக்க முயல்கின்றனர். தெற்கே ஆந்திரர் விசால ஆந்திரமும் கேரளர் ஐக்கிய கேரளமும் வேண்டிக் கிளர்ச்சி செய்கின்றனர்.

இந்தியாவிலுள்ள பிற எந்த தேசீய இனத்தவரையும்விட, வளம் பொருந்திய நாடும், தொன்று தொட்டு வரும் வரலாறும், தோன்றிய காலம் அறியாத தொன்மை மிக்க தமிழ் மொழியும், படைத்த தமிழ் இனத்தவராகிய நாம் வேண்டுவதென்ன ?

குமரிமுதல் வேங்கடம் வரையிலுள்ள தமிழகத்தை, தனி நாடாக்க வேண்டும்.

வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூடி தமிழ் நாட்டின் அரசியலையும், பிறநாட்டினருடன் அல்லது பிற

மாகாணத்தினருடன் தமிழ் நாட்டிற்கு இருக்க வேண்டிய உறவு எத் தகையது என்பதையும் நிர்ணயிக்க வேண்டும்.

இந்தக் கோரிக்கைகள் பிறர் கொடுத்துப் பெற வேண்டிய அவசியம் இல்லாமல் நாமே ஒன்றுபட்டுப் பிரகடனப்படுத்த உரிமை பெற்றுள்ளோம். ஏனெனில் தமிழகத்தின் சுதந்திரம் தமிழினத்தின் பிறப்புரிமையாகும்.

2½ கோடி தமிழ் மக்களும், ஒன்று கூடி தமிழகம் சுதந்திர நாடு என்று பிரகடனம் செய்தால் அதைத்தடுப்பார் யார் ?

'தமிழ் இனம் என்றால் உழைப்பாளி இனம் என்றே பொருள். ஆகவே மனிதனை மனிதன் சுரண்டுவதற்கு இடம் இல்லாத சோஷியலிஸக் குடியரசைத்தான் நாம் விரும்புகின்றோம். பிற நாட்டார் தமிழ் நாட்டைச் சுரண்டக்கூடாது என்பது போல, தமிழ் நாட்டிலும் ஒருவரை ஒருவர் சுரண்டுவதைச் சுதந்திரத் தமிழகம் அனுமதிக்காது. சுரண்டல் கொள்கையை எல்லாவகையிலும் ஒழிக்கவே நாம் தமிழரசு கோருகிறோம்.

மாணவர்களாகிய நாம் நமக்குள்ள குறைகளைப் போக்குவதற்கு முற்படவேண்டும். பிறமொழிபேசும் மாணவர்களைவிட, தமிழ் மொழி பேசும் மாணவர்களாகிய நமது குறைகள் எண்ணித் தொலையா; ஏட்டில் அடங்கா. சீர்அழிந்த தமிழ் இனச் சின்னமாக தமிழ் மாணவருலகம் விளங்குகிறதென்றால் மிகையன்று. சான்றாக தொழிற் கல்லூரிகளில் மொழிவாரி மாகாணங்கட்கு இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அதில் தமிழ் நாட்டின் பங்கிற்கு நிச்சயிக்கப்பட்டுள்ள இடங்களுக்கு முற்றும் தமிழ் மாணவர்களே தேர்ந்தெடுக்கப்படுவதில்லை. தமிழ் ஜில்லாக்களில் வாழுகின்றனர் என்ற காரணத்தால் தெலுங்கு, மலையாள, கன்னட மாணவர்கட்கு தமிழர் பங்கில் இடம் அளிக்கப்படுகின்றது. ஆனால் இதே போன்று ஆந்திர கேரள கன்னட பிரதேசங்களிலிருந்து தமிழ் மாணவர்கள் அந்த

பிரதேசங்கட்கு உரிய பங்கில் இடம் பெறுகிறார்களா? இல்லை.

விடுதிகளில்கூட பிற மொழி மாணவரின் தொகைக்கு மிக மிக குறைந்த அளவிற்கே தமிழ்மாணவர்கட்கு இடம் கிடைக்கின்றது. இவ்வாறு குறைகள் இன்னும் எவ்வளவோ உண்டு.

தமிழகம் தனிநாடாகி, அதில் தமிழரசு கண்ட பின்னரே தமிழ் மாணவரின் குறைபாடுகள் மறையும். இது உறுதி.

இன்று தமிழரின் முன்புள்ள மற்றோர் பிரச்னை எல்லை நிர்ணயிப்பதாகும். நமது ஆந்திரத் தோழர்கள் சென்னை, சித்தூர்மீது நேர்மையற்ற முறையில் உரிமை கொண்டாடுகின்றனர். இதே போல் தெற்கே திருவிதாங்கூரில் தமிழர் நிலத்தைப் பறிக்க மலையாளிகள் திட்டமிட்டு வேலை செய்கின்றனர். தமிழகத்தின் தெற்கெல்லையான குமரி முனையை ஐக்கிய கேரளத்தோடு சேர்க்க ஆவல் கொண்டுள்ளனர். மற்றும் புதுவை, காரைக்கால் போன்ற பிரெஞ்சுத் தமிழகத்தைத் தமிழகத்தோடு சேர்க்க பிரஞ்சு ஏகாதிபத்தியம் மறுக்கின்றது. அங்கு தமிழ் மக்கள் நடத்தும் சுதந்திரக் கிளர்ச்சிமீது மிருகத்தனமான அடக்கு முறையைப் பிரயோகிக்கின்றது.

மாணவத் தோழர்களே! துண்டுபட்ட தமிழ் நிலங்களை ஒன்றுபடுத்தி குமரி முதல் வேங்கடம் வரை உள்ள புதிய தமிழகத்தை உருவாக்குங்கள்.

சென்னைமீது ஆந்திரர் மேற்கொண்டுள்ள படையெடுப்பை முறியடியுங்கள்.

தமிழினத்தின் அரசியல் கோரிக்கை பூரண சுதந்திரமுள்ள தமிழ் சோஷலிசக் குடியரசே என்பதைத்தெளிவாகத் தெரிவியுங்கள்.

கட்சி பேதங்களை அகற்றி, தமிழகத்தின் விடுதலைக் கிளர்ச்சிக்குப் பாடுபடும் மாணவத் தொண்டர் படையைத் திரட்டுங்கள்!

[மாநாட்டின் மற்ற விவரங்களும் படங்களும், அடுத்த இதழில் வெளி வரும்]

---

# வடக்கெல்லையில் ம. பொ. சி.

(சென்ற இதழ் தொடர்ச்சி)

சி. வே.

திருத்தணிகைக் கூட்டத்தில் ஏற்பட்ட சிறு குழப்பத்தால் தமிழரிடையே பெருத்த அளவுக்கு விழிப்பு ஏற்பட்டது. விஷமிகளின் செயலை அங்குள்ள தமிழர் தங்கள் தன்மான உணர்ச்சிக்கு ஆந்திரர் விடுத்த அறைகூவல் என்று எண்ணினர். ம. பொ. சி.யின் பேச்சு அவர்களது உணர்ச்சிக்கு ஊக்கமும் அளிப்பதாயிற்று. இதன் விளைவாக அன்றிரவும் மறுநாட் காலையிலும் வீதிகளிலும் வீடுகளின் திண்ணைகளிலும் தமிழர் கூட்டம் கூட்டமாகக் கூடி தமிழ் நாட்டின் வடக்கெல்லையைக் காப்பதைப்பற்றியே பேசியவண்ணம் இருந்தனர். தமிழரிடையே ஏற்பட்ட இந்த விழிப்பைக்கண்டு அங்குள்ள ஒரு சில ஆந்திரருக்குப் போட்டியும் பொறாமையும் தோன்றியுள்ளதாம். இம்மாதம் 19ந் தேதி புலுசு சாம்பமூர்த்தி தலைமையில் ஒரு மாநாடு கூட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருவதாக அறிகிறோம். நல்லதுதான். போட்டி வந்தால்தானே பொருளின் உண்மை மதிப்பு வெளியாகும்.

## அரக்கோணம் வீர இளைஞர்கள்

18-8-47ந் தேதி காலை நாங்கள் திருத்தணிகையை விட்டுக் கிளம்பி நகரி (புத்தூர்ப்பேட்டை) சேர்ந்தோம். திருத்தணிகைவரை எங்களுக்குத் துணைபுரிந்துவந்த அரக்கோணம் தொண்டர்படை மேலும் எங்களுடன் வர அவகாசம் இன்மையால் இங்கு விடைபெற்றுக்கொண்டது. அப் படையின் தலைவர் தமிழறிஞர் சங்கரன் ஆவார். இந்த இளைஞர் தலைவர் அரக்கோணம் பள்ளி ஒன்றில் ஆசிரியராக விளங்கு

கிறார். என்றாலும் தமிழகத்தின் விடுதலைக்குப் பாடுபடுவதைத் தனது தலையாய கடமையாக எண்ணுபவர். தமது ஓய்வு காலத்தில் இளைஞரைத் தமது துணைபிரியாத் தோழர்களாகக் கொண்டிருக்கிறார். அறிஞர் சங்கரன் தோழர்களும் தமிழரசுப் படையினரும் ஊர்வலமாகச் சென்ற இடங்களில் காண்போர் கண்கள் களித்தன. 'தமிழ்நாடு தமிழருக்கே,' 'வேங்கடத்தை விடமாட்டோம்,' 'தமிழ்க் கொடியை நாட்டுவோம்' என்று இப் படையினர் எழுப்பிய பேரொலி கேட்போரின் சிந்தனையைக் கிளறி, செந்தமிழ் நாட்டின் விடுதலைக்குப் பாடுபட அறைகூவி அழைத்தது.

**நகரி**

திருத்தணிகையில் சங்கரனுக்கும் அவர் படையினருக்கும் விடைகொடுத்துவிட்டு, நாங்கள் நகரி சேர்ந்தோம். அங்கு திரு. வரதப்ப முதலியாரும் அவரது தோழர்களும் எங்களை எதிர்கொண்டழைத்தனர். வீதிகளிலும் வீடுகளிலும் தமிழ்க்கொடியும் இந்திய தேசியக் கொடியும் ஆடிப் பறந்து எங்களை அன்புடன் அழைத்தன. உணவை திரு. சுவாமிநாத முதலியார் இல்லத்தில் முடித்துக்கொண்ட பின்னர், கணமும் தாமதியாது ஊர்வலத்தில் கலந்துகொண்டோம். உள்ளூர் காங்கிரஸ்காரர்கள் எல்லோரும் ஊர்வலத்தில் பங்குகொண்டனர். இன்னிசை வாத்தியங்கள் முன்னே முழங்க, இளைஞர்களின் இன்பத் தமிழொலி பின்னே ஒலிக்க, ஆண்களும் பெண்களும் அடங்கிய ஊர்வலம் பல வீதிகளையும் கடந்து 'சிவ சக்தி வேல்' கொட்டகையை அடைந்தது. ஊர்வலத்தின் இடையே ஒரு சுவை தரும் நிகழ்ச்சி; மறக்கமுடியாத நிகழ்ச்சி; சுமார் 10 வயதுள்ள ஒரு பெண் 'தெய்வம்' எங்கள் ஊர்வலத்தில் கலந்துகொண்

டது. எதற்காக? எங்களுக்குத் துணைபுரியவா? இல்லை, இல்லை. தொந்திரவு கொடுக்க. அந்தப் பெண் வடிவம் வாய் திறந்து கோஷித்தது. 'தமிழ் நாடு தமிழருக்கே' என்று? இல்லை. விசால ஆந்திரம் வேண்டுமென்று? அதுவு மில்லை. 'ஆந்திராவும் வேண்டாம். தமிழ் நாடும் வேண் டாம். சித்தூர் சித்தூர்க்காரர்களுக்கே' என்று பேசியது அவ்வடிவம். அதுமட்டுமல்ல. தமிழகத் தலைவர்கள் சில ரது பெயரைக் கூறிப் பழி தூற்றியது. ஆந்திரத் தலைவர்களை யும் வெறுப்பதுபோல் பாசாங்கு செய்தாலும், பாசம் அவ் விடத்தில்தான் என்று தன்னை அறியாமலேயே பகிரங்கப் படுத்தியது. அந்தண மரபு; அசெம்பிளி அங்கத்தினரின் உறவு; சிறைசென்ற சிறப்பு; அத்தனையும் தனக்குண்டென விளம்பரப்படுத்தியது.

கொட்டகையில் நடந்த கூட்டத்திலும் அம் மாதின் திருவிளையாடல் நின்றபாடில்லை. ஆண்களின் மத்தியில் அமர்ந்து கூட்டத்தில் பேசுவோரை நாணமின்றி நையாண்டி செய்துகொண்டிருந்தது. கூட்டத்தின் ஆரம்பமுதல் இதைச் சகிப்புத் தன்மையுடன் கவனித்துவந்த கூட்டத் தலைவர் ம. பொ. சி. முடிவுரையில் இந்தப் பெண் வடிவத் தின் விஷமத்தனத்தைக் கண்டித்தார்.

"சித்தூர் சித்தூர்க்காரர்களுக்குத் தான் ஆகும். அதை யாரும் அபகரிக்க முடியாது. ஆனால் அந்தப் பகுதியை எந்த நாட்டோடு சேர்த்துப் பட்டா செய்வதென்பது தான் இன்றைய பிரச்சினை. தமிழ் நாட்டுடன் சேர்க்கப்பட்டால் இங்குள்ள யாரும் வெளியேற் றப் படமாட்டார்கள். ஆந்திரர்களும் கூட இங்கே இருந்து வாழ லாம். அவர்கள் தாய்மொழியாம் தெலுங்கைக்கற்கவும் தடை இருக்காது. சித்தூர் தமிழர்கள்—தெலுங்கு பேசும் தமிழர்கள் தமிழகத்தோடு சேர உறுதிகொண்டு விட்டனர். இதை எத்

தவணக் 'கூனி'கள் தோன்றினலும் குலைக்கமுடியாது. சித்தூர் ஜில்லா தமிழ்த் தாலூகாக்கள் ஆந்திரர்களுக்கு அடிமைப்படுத்த விரும்புபவர்கள் தான் 'சித்தூர் சித்தூர்காரருக்கே' என்று கோஷிக்கின்றனர். தமிழரைத் தமிழ் நாட்டின் பாதுகாப்பிலிருந்து பிரிக்கச் செய்யும் இந்தப் பொய்ம்மான் போன்றவர்களின் கோஷங்களில் ஏமாருமல் எச்சரிக்கையாக இருங்கள்'' என்ருர்.

ம. பொ. சி.யின் கண்டனத்துக்குப் பிறகு 'பெண் தெய்வத்'தின் பேச்சு அடங்கியது. தமிழர் கட்சியைப் பின்பற்றுவதாகக்கூட வாக்குறுதி தந்ததென்ருல், வேறு கேட்பானேன்?

நகரி கூட்டம் சிறந்த முறையில் நிகழ்ந்தது. அழகான கொட்டகை. அதை முற்றுகையிடுவதுபோல் ஜனத்திரள். ஆண்களின் எண்ணிக்கையோடு போட்டியிடுவது போன்று பெண்மக்கள் கூட்டத்தின் பெருக்கம். ஆனல், ஒரு குறை. கூட்டம் முடிந்தபின்னரும் கொட்டகையை நோக்கி அணியணியாக வந்துகொண்டிருந்தனர். பஸ்ஸுக்கு நேரமாகிவிட்டதால் கூட்டத்தை விரைவில் முடிக்க நேர்ந்தது. இதனல் வந்துகொண்டிருந்த மக்கள் பலர் ஏமாந்தனர்.

## புத்தூர்

நகரிக் கூட்டத்தை முடித்துக்கொண்டு புத்தூருக்குப் புறப்பட்டோம். புத்தூரில் எங்களை வரவேற்க திரு. துரைசாமி முதலியார் உள்ளூர் பிரமுகர்கள் புடைசூழ வழியிலேயே மேளதாளத்துடன் எதிர்கொண்டழைத்தார். புத்தூரில் கால்வைத்த மறுகணமே வாத்தியம் முழங்க, வளமார் தமிழொலி எழும்ப, ஊர்வலம் புறப்பட்டது. வழி

எங்கும் தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. அந்தத் தோரணங்களில் தொங்கும் அட்டைகளில் தமிழகத்தின் விடுதலைக் கோரிக்கைகளை வெளியிடும் வாக்கியங்கள் இருந்தன. 'உங்கள் வருகையால் புத்தூரே புத்துயிர் பெற்றுவிட்டது' என்றார் பிரமுகர் ஒருவர். ஆம், ஊர்வலமும் கூட்டமும் ஒப்பற்ற முறையில் அமைந்தன.

மாலை 6 மணிக்கு பாஞ்சாலி கோயிலின் எதிரிலுள்ள மண்டபத்தில் கூட்டம் கூடியது. திரு துரைசாமி முதலியார் தலைமை தாங்கினார். மண்டபத்திலும் மண்டபத்திற்கு வெளியிலும் கூட்டம் மிகுந்திருந்தது. சுற்றுப்புற ஊர்களிலிருந்தும்கூட இளைஞர்கள் வந்து குழுமினர்.

துவக்கத்தில் ஆசிரியர் மங்கலங்கிழார், சித்தூர், ஜில்லா ஏற்பட்ட வரலாறு, அதில் தமிழர் படும் இடர்ப்பாடு, அதை இழப்பதால் தமிழகத்துக்கு ஏற்படும் கேடு ஆகியவற்றை விரிவாக விளக்கினார். பின்னர் கொ. மொ. ஜனார்த்தனமும் நானும் பேசினோம். இறுதியாக ம. பொ. சி. சுமார் ஒரு மணி நேரம் பேசினார். இயற்கையாகவே உணர்ச்சி ததும்பப் பேசுபவர், அன்று அவ் வுணர்ச்சியின் சிகரத்தில் நின்று சித்தூர் ஜில்லா தமிழர்களைச் சேர வரும்படிக் கூவி அழைத்தார்:

"புத்தூருக்குத் தனிப்புகழ் உண்டு. ஒடிந்த எலும்பை ஒன்று கூடச்செய்யும் ஒப்பற்ற வைத்தியரைப் படைத்ததே அப்பெருமை. பெரிய பெரிய சர்ஜன்களும் கைவிட்டவர்களையெல்லாம் கை கொடுத்துக் காப்பாற்றியவர் இங்குள்ள பச்சிலை மருத்துவர்.

நான் கையொடிந்து வரவில்லை; காலொடிந்தும் வரவில்லை உள்ளம் ஒடிந்து ஓடிவந்தேன். 'திருப்பதியில்லை திரும்பாது'

என்று தமிழகத்தின் அரசியல் சர்ஜன்கள் பலர். கைவிட்டுவிட்டனர். புத்தூர் மக்களே! உங்கள் ஒத்துழைப்பு என்ற பச்சிலை மருத்துவத்தால் ஒடிந்த என் உள்ளத்தை உருவாக்குங்கள். தமிழகத்திலிருந்து சிதைக்கப்பட்ட சித்தூர் ஜில்லாவின் தமிழ் தாலூகாக்களைச் சேர்த்து ஒரு புதிய தமிழகத்தை உருவாக்க உதவி புரியுங்கள்.

ஆந்திரர்கள், தெலுங்கு பேசும் தமிழரைக்கொண்டு திருப்பதியைப் பறிக்கத் திட்டமிட்டுவிட்டனர். குரங்கொன்று கடலைக் காய் தின்ன விரும்பியது. பச்சைக்காயை நெருப்பிலிட்டு வேக வைத்தது. ஆனால் எடுக்கப் பயந்தது, கைசுடுமென்ற காரணத்தால். குறுக்கே சென்ற பூனையைக் கூப்பிட்டு காயை எடுக்கும்படி கனிவுடன் வேண்டியது. 'கை சுடுமே' என்றது பூனை. 'நானும் உன் கையைப் பிடித்துத் துணை செய்கிறேன். சுட்ட காயை எடுத்ததும் இருவரும் பங்கிட்டுக்கொள்ளலாம்' என்றது குரங்கு. பூனை காயை எடுக்க முயன்றது. கை சுட்டபோதும் குரங்கு விடாது அழுத்த, வேர்க்கடலைகள் அனைத்தையும் பூனை வெளியே எடுத்தது. அத்தனை காய்களையும் குரங்கே அபகரித்துச் சென்றுவிட்டது. பூனைக்கோ ஏமாற்றம்தான். கைகள் சுடுபட்டதைத் தவிர காய்கள் கிடைக்கவில்லை.

ஆந்திரர் கதையும் அப்படித்தான் இருக்கிறது. சென்னையும் சித்தூரும் ஆந்திரர்க்கே என்ற கோரிக்கையை ஆராய்ச்சியின்றி கிளப்பிவிட்டனர். பின்னர் கோரிக்கையில் வெற்றிபெற தெலுங்கரின் துணையைக் கோருகின்றனர். 'நீங்களும் ஆந்திரர்களே' என்று ஆசை மொழி கூறுகின்றனர். இதெல்லாம் கோரிக்கை நிறைவேறும்வரைதான். குரங்கு காயைப் பெற்ற பின்னர் பூனையை ஏமாற்றியதுபோன்று, நமது ஆந்திர ஆதிக்கவாதிகள் தமிழ் நிலத்தைக் கொள்ளைகொண்டபிறகு ஆந்திரர் வேறு, தெலுங்கர் வேறு, அதாவது 'அசல் அந்திரவாரு, சகமு ஆந்திர வாரு' என்று பேதம் பிரித்து பங்கு கொடுக்க மறுப்பார்கள். இதைச் சென்னையிலுள்ள தெலுங்கர்களிடம் செய்துகாட்டியும் இருக்கிறார்கள். (சென்ற இதழில் வெளியான 'வேங்கடத்தை

விடமாட்டோம்' என்ற சொற்பொழிவில் இதன் விரிவைக் காண்க).

*எனவே, வீட்டில் தெலுங்கு பேசினாலும் இங்குள்ள தெலுங்கர் இதர தமிழர்களுடன் சேர்ந்து தங்கள் தாயகமாம் தமிழகத்தின் எல்லையைக் காக்க முன் வரவேண்டும்" என்று முழங்கினார்.*

**வேங்கடத்தில்**

புத்தூரில் கூட்டம் முடிந்ததும், மறுநாள் 19ந் தேதி காலை எங்களில் பலர் ம. பொ. சி.யுடன் மேலும் செல்ல அவகாசமின்மையால் சென்னை திரும்பிவிட்டோம். திருவாளர்கள் தாமோதரம், சுவாமிநாதன் ஆகிய இருவரும் அவருடன் திருப்பதி சென்றனர். திருப்பதியில் நடந்த கூட்டத்தில் ம. பொ. சி. பேசியதைக் கடந்த இதழில் படித்தோம். திருப்பதிக்கு ம. பொ. சி.யுடன் சென்ற நண்பர்கள் கூறுவதிலிருந்து அங்கு செல்ல நான் கொடுத்து வைக்கவில்லையே என்ற குறை என் உள்ளத்தை உருக்குகின்றது. திருப்பதியில் ஆந்திரர் பலர் ம. பொ. சி.யின் கூட்டத்தைக் கலைக்க பேயாட்டம் ஆடினராம். 'இது ஆந்திரா ராஜ்யம். பொன்னண்டி' (திருப்பதி ஆந்திர ராஜ்யம்—வெளியேறு) என்று ஆரவாரம் செய்தார்களாம். ஆனால் திருப்பதிக் கல்லூரித் தமிழ் மாணவர்கள், ஆசிரியர்கள் மன உறுதி, தலைவர் ம. பொ. சியின் வாக்குவன்மை, ஆகியவற்றின் முன்னர் ஆந்திரரின் ஆரவாரம் எம்மாத்திரம்? ம. பொ. சி. யுடன் சென்ற நண்பர் சொல்லுகின்றார், திருப்பதிக் கூட்டம் நூற்றுக்கு நூறு வெற்றியென்று. நாங்கள் சித்தூரிலிருந்து திரும்பிய பின்னர், நாங்கள் சென்றிருந்த இடங்களி




**இந்த அடையாளம் உள்ளவை**
**1911-ம் ஹு மார்ச்மீ 31உ வரையில் வட ஆர்க்காடு ஜில்லாவோடு சேர்ந்திருந்த தமிழ் தாலுகாக்கள்**
**(சென்னை சர்க்கார் கெஜெட் கூறுகிறது.)**

லிருந்து வரும் கடிதங்களிலிருந்து எங்கள் பிரயாணம் எதிர் பாராத அளவுக்கு வெற்றியளித்துவிட்டது என்பதில் ஐய மில்லே. சித்தூர்—திருப்பதி—திருத்தணி முதலிய இடங் களில் ஆந்திரர் தமிழர் கூட்டங்கள் மாறிமாறி நடக்கின்றன வாம். எங்கள் பிரச்சாரம் சித்தூர் ஜில்லா இன்னும் சில பகுதிகளில் துவங்கவே இல்லே. அக்டோபர் மாதம், மீண் டும் ஒருமுறை தமிழரசுக் கழகப்படை இதுவரை செல்லாத பகுதிகளுக்குச் சென்றுவர இருக்கின்றது.

எங்கள் பிரயாணத்திற்கு ஏற்பாடுசெய்து எங்களுக்கு தோன்ருத் துணேயாக இருந்து எல்லா உதவிகளும் செய்த வர்கள் ஆசிரியர் மங்கலங் கிழாரும், வழக்கறிஞர் அரங்க நாத முதலியார் அவர்களுமாகும். அவ்விரு பெரியார்களும் எங்களுக்குத் துணேபுரிந்திராவிடில் எங்கள் பிரயாணம் இவ்வளவு வெற்றிகரமாக முடிந்திருக்காது. அவர்களுக்கு நாங்கள்மட்டும் அல்ல. தமிழகமே நன்றிசெலுத்தக் கடமைப் பட்டுள்ளது. சென்னேயிலிருந்தே எங்களுடன் சேர்ந்து வந்து எல்லாக் கூட்டங்களிலும் தமிழரசுப் பாடல்கள் பாடி தமிழ் மக்களுக்குப் புத்துயிர் ஊட்டியவர் திரு. தாமோதரம் அவர்கள். நாங்கள் சென்ற விடங்களிலெல்லாம் தமிழரசுக் கழகக் கிளேகளே அமைத்துள்ளோம். ஆக்வே எங்களது பிரச்சாரத்தைப் பயன்படுத்தி, ஆங்காங்கே வேலேகள் தீவிர மாக நடைபெற்று வருகின்றன.

---

# பாரதியாருக்கு விடுதலை எப்போது?

'பாரதி பக்தன்'

**பா**ரதியார் நம் நாட்டின் தவப் புதல்வர். அவர் பாடல்கள் நமக்கு எல்லாத் துறைகளிலும் வழிகாட்டும் வான் விளக்காக விளங்குகின்றன.

ஆனால் இன்று அவற்றின் நிலை என்ன? அவை சிறை பட்டுக் கிடக்கின்றன என்ற செய்தி தமிழ் நாட்டுக்கு வியப்பை அளிக்கலாம். ஆயினும் உண்மை அதுதான்.

பாரதியார் அவர்களின் பாடல்களை மக்களிடையே பரப்ப முடியாமல் ஏங்கவேண்டியிருக்கிறது. வானொலி, இசைத்தட்டுகள், பாடப் புத்தகங்கள் முதலியவற்றின் மூலம் அப் பாடல்களை எடுத்து வழங்கவேண்டுமானால், அதற்குத் தடை ஏற்பட்டுள்ளது. அவற்றிற்கான உரிமை முழுவதும் ஒரு தனி நபர் கையில் சிக்கிக் கொண்டிருக் கிறது. வடநாட்டார் ஒருவர் கையிலிருந்து தென்னாட்டார் ஒருவர் கைக்கு அவ் வுரிமை மாறியிருக்கிறது. இதுதான் சமீப காலத்தில் ஏற்பட்ட மாறுதல். இதனால் பாரதியார் குடும்பத்துக்கும் நன்மை ஏற்படவில்லை; நாட்டிற்கும் லாப மில்லை.

இந்த நிலை மாறியாக வேண்டும். சென்ற ஆண்டு எழுத்தாளர் மாநாட்டிலேயே இதைக் குறித்த கிளர்ச்சி தொடங்கப்பட்டது. அதற்கு முன்பும் எல்லாத் தமிழ்க் கூட்டங்களிலும் இதைக் கண்டித்து தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன. ஆனால் இதைப்பற்றி ஒருவரும் கவலை கொண்டதாகவே காணோம்.

ஒவ்வொரு வருஷமும் பாரதிவிழா கொண்டாடும் போது, எல்லோரும் இதைப்பற்றி காரசாரமாகப் பேசுகின்றனர்; தீர்மானங்கள் செய்கின்றனர். அத்துடன் நின்று விடுகின்றது.

இவ்வருடம் தனிச்சிறப்பு வாய்ந்தது. நாம் உரிமை பெற்று உலகில் திகழ்கின்றோம். சுதந்திரக் கொடியின்கீழ் தலை நிமிர்ந்து நிற்கின்றோம். இந்த லட்சியத்துக்காகவே உழைத்த நம்புரட்சிப் புலவருக்குச் செய்யவேண்டிய கடமையை நாம் மறக்கலாமா?

நம்முடைய உரிமைக்காக அவர் அல்லும் பகலும் பாடுபட்டார். தமிழ்ப் பாடல்கள் மூலம் மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் ஊட்டினார். பத்திரிகைத் துறையிலும் அரசியல் துறையிலும் பன்னாள் தொண்டுபுரிந்தார். அத்தகையவருடைய பாடல்களை நாட்டின் பொதுச்சொத்தாக்க வேண்டாமா? எல்லாத் தமிழ் மக்களும் அவற்றை அறிந்து போற்ற வேண்டாமா?

இதற்குத் தடையாக இருக்கும் கட்டுப்பாடுகளிலிருந்து பாரதியார் பாடல்களை மீட்க வேண்டியது அறிஞர் கடன். நம்முடைய மக்கள் சர்க்கார் இதற்காவன செய்யுமாறு வற்புறுத்த வேண்டும். இக்கடமையைத் தமிழ் நாட்டாருக்கு நினைவூட்டுகின்றேன்.

இத்தனைநாள் சிறைக்கிடந்தது போதும். நாம் விடுதலை பெற்றது போலவே, பாரதியார் பாடல்களும் விடுதலை பெற்றே தீரவேண்டும்.

---

# நாடெங்கும் கிளைக் கழகங்கள்

## சித்தூர் ஜில்லா

திருவாலங்காடு: தலைவர்: திரு. டி. எம். திருமலைப் பிள்ளை, செயலாளர்: திரு. டி. எம். சபாபதி தேசிகர், துணைச் செயலாளர்: திரு. டி. பி. சம்பத், பொருட்காப்பாளர்: திரு. டி. நடராசன், உறுப்பினர்கள்: கே. ஆர். சுப்பிரமணியம், ஏ. டி. ரத்தின சபாபதி, கே. டி. சந்தானம், கே. டி. சம்பத்து, எஸ். ராமமூர்த்தி, கே. ஆர். ஜெகதீசன், வா. சிவானந்தம் மற்றும் பலர்.

திருத்தணி தாலுக்கா: தலைவர்: பி. கண்ணப்பர், செயலாளர்: நாராயணன், துணைச்செயலாளர்: போ. சுப்பிரமணியம், பொருளாளர்; மீ. சு. வடிவேலு, உறுப்பினர்கள்: விநாயகம் எம். ஏ. எல். டி., ஆறுமுகம், பி. ஏ. பி. எல், வி. சி. ருக்மாங்கதன், விமலசேகரன், எஸ். கிருஷ்ணசாமி, கேசப்ப முதலி. ராமசாமி ரெட்டி, எம். மாணிக்கம், என். ஜானகிராமர், ஜனாப் ரஷீத், சண்முகம், எம். ஏ. எல். டி.

நகரி (புதுப்பேட்டை): தலைவர்: திரு. வி. க. வரதப்ப முதலியார்: செயலாளர்: திரு. ப. உலகநாதம்; துணைச்செயலாளர்: திரு. பா. ஆறுமுக முதலியார்; பொருட்காப்பாளர்: திரு. வி. கோ. சுவாமிநாத முதலியார்.

உறுப்பினர்; திரு. வி. க. சஞ்சீவி முதலியார், வி. க. சீதாராமன்; வி. க. பாண்டுரங்கன்; வி. க. கல்யாணம்; பா. களத்தி முதலியார்; க. குப்புசாமி முதலியார்; மா. சிவலிங்க முதலியார்; மு. செஞ்சி முதலி; பா. முருகப்ப முதலி; பூ. ஆறுமுகம்; மு. விஸ்வநாதம்; சோ. கோவிந்தசாமி.

புத்தூர்: தலைவர்: மி. எ. முத்துவேல், செயலாளர்கள்: கா. கன்னியப்பர்; பெ. எ. இராமலிங்கம்; பொருட்காப்பாளர்:

திரு. வ. நடேசம்; உறுப்பினர்கள் : தொ. அருணாசலம், தாசிரி கோபால், பேயம் கிருஷ்ணய்யர், மின்னல் அகத்தியப்பர், அடுக்கல் ஆறுமுகம்; சீலக்கார் அருணாசலம்; கடப்பை நரசிம்மம்; மி. செ. எல்லய்யர்; கே. எஸ். ராமசாமி; பு. வே. முனுசாமி; மத்தூர் குப்பாத்தர்.

## மாணவர் தமிழரசுக் கழகம்

குளித்தலை ; குளித்தலையில் மாணவர் தமிழரசுக் கழகம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அதன் செயற் குழுவினர் வருமாறு :

தலைவர் : வித்வான். பா. அரங்கசாமி; துணைத் தலைவர் : அப்புகுட்டான்; செயலாளர்; அ. முருகேசன்; பொருளாளர் : வை. கிருட்டின மூர்த்தி.

செயற்குழு உறுப்பினர் : துரைசாமி, இராசலிங்கம், சண்முகம், சேதுராமன், இராதா, சண்முகநாதன்.

இக்கழகம் சென்னையிலுள்ள மத்திய தமிழரசுக் கழகத்தின் வழியைப்-பின்பற்றி பணியாற்றும்.

வட சென்னை :—தலைவர் : பி. ஆர். சீராமுலு, செயலாளர் : த. ஆறுமுகம் ; துணைச் செயலாளர் : திரு. வேணுகோபால்.

உறுப்பினர்கள் : பெ. வரதராஜுலு, ஜான் மாசிலாமணி, ராமலிங்கம், வேங்கடராமன், மாணிக்கம், ஊ. சண்முகம், தாண்டவராயன், குப்புராஜன், தேவராஜன், நடராஜன்.

சூளை குயப்பேட்டை : தலைவர் : மு. தியாகராயன், செயலாளர் : க. சண்முக சுந்தரன், பொருட்காப்பாளர் : துரை அரங்கநாதன்; உறுப்பினர் : சே. ந. வேப்பங்குழலன்; பொ. கணேசன்; கு. கண்ணன்; மா. முத்துகிருஷ்ணன்;

திருச்செங்கோடு : தலைவர் : வி. குருநாதன்; துணைத்தலைவர்கள் : டி. சங்கரலிங்கம்; டி. வி. சண்முகம்; செயலாளர்கள் : டி. பி. மணி; டி. வி. ஆறுமுகம்; பொருட்காப்பாளர் : டி. வ. தங்கவேலு.

உறுப்பினர் : கே. எ. காசி விஸ்வநாதன், என். கே. பி. வேலு, டி. வி. முனியப்பன், என். அருணுசலம், டி. எ. அர்த்தனுரி, டி. எம், சுப்பிரமணியம் மற்றும் மூவர்.

புதுவை : தலைவர் : வீ. கோவிந்தராசன்; செயலாளர் : முனி துரைக்கண்ணன்; பொருட்காப்பாளர் : மு. கோபால கிருட்டினன்; மற்றும் பதினேரு செயற்குழு. உறுப்பினரும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

முத்துப்பேட்டை : தலைவர் : ராம. சோமசுந்தரம்; துணைத் தலைவர் : ந. சன்முகம்; செயலாளர்கள் : எம். எம். முத்து; சுப்பிரமணியம்; பொருளாளர்: எஸ். சிதம்பரம்; உறுப்பினர்: ஆர். கே. சாம்பசிவம்; எ. கிருஷ்ணன்; டி. எஸ். சதாசிவம்; ஆர். கே. காளி முத்து; ஆர். சீனிவாசன்; எஸ். சிங்காரம்; சி. சந்திரசேகரன்; ரெ. நாராயணசாமி; சு. சுந்தரராஜன்; வி. எஸ். வேங்கடாசலம்,

---

## திருவிதாங்கூர் தமிழருக்குச் சோதனை காலம்

திருவிதாங்கூர் மன்னரின் உரிமைப் பிரகடனத்தைக் கண்டு மகிழ்கின்ருேம். வயதுவந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள்கூடி அரசியலை நிர்ணயிக்கலாம் என்று உறுதி கூறி, அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவும் அவர் தொடங்கிவிட்டார்.

இப்போது அங்கேயுள்ள தமிழர் கடமை என்ன? 'சமஸ்தானம்' என்ற கூண்டிற்குள் எப்போதும் அடைபட்டு, இன உணர்ச்சியை மறந்து, தம் தாயகத்தோடு சேராமல் வாழ்வார்களா? அல்லது தற்காலிகமாக சமஸ்தான மன்னரின் கீழேயே பொறுப்பாட்சிபெற்று தனி நிர்வாக மாகாணமாக அமைத்து, புதிய தமிழக இயக்கத்துக்கு ஆதரவு தந்து, இனவாரி அரசுகளைக் காண வழி தேடுவார்களா?

(சஅ-ம் பக்கம் பார்க்க.)

# மதிப்புரை

"சிலம்பு": (மாத வெளியீடு) ஆசிரியர்: வி. செல்வராஜ், தமிழ்ச்சோலை, திருப்பத்தூர், வடாற்காடு; விலை அணா நான்கு. அரசியல் கருத்துக்கொண்ட 'கார்ட்டூன்' படங்களுடன் திருவாளர்கள் மு. வ., புலவர் மு. கோவிந்தசாமி போன்ருரின் சிறந்த கட்டுரைகளும் நாமக்கல் கவிஞரின் பாடலும் அடங்கியிருக்கின்றன.

"சினிமா முரசு": (மாத மிருமுறை) ஆசிரியர்: செங்கு, எழுகிணறு, சென்னை, விலை அணா இரண்டு. இப்போது தமிழகத்தில் பத்திரிகையுலகில் முரசொலி அதிகமாகக் கேட்கின்றன. அதில் இதுவும் ஒன்று. சினிமா கலையை வளர்க்கவும், அதில் புகுந்துள்ள தீமைகளை அகற்றவும் உதவி புரியும் கட்டுரைகள் பல இதில் காணப்படுகின்றன. அம்முயற்சில் 'முரசு' வெற்றி பெறுவதாகுக.

'முருகு": ஆசிரியர் மா. சு. சம்பந்தன், 69, நயினியப்பன் தெரு, மண்ணடி, விலை நான்கணா. தமிழகம் சுதந்திரம் பெறப் பாடுபடுவதே இதன் கொள்கையென்பதை அறிந்து களிப்படைகிரேம். பல சிறந்த எழுத்தாளர்களின் சிந்தனைக்குரிய கட்டுரைகள் இதில் இருக்கின்றனர்.

(சஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

திருவிதாங்கூர் தமிழர்கள் தீர்க்க தரிசனத்தோடு இப்பிரச்சினையைக் குறித்து நன்கு ஆராய்ந்து சிறந்த முடிவுக்கு வருவார்கள் என்று எதிர்பார்க்கிரேம். மக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்துக்கு எதிராக ஒரு சில சுயநலமிகளால் செய்யப்படும் தீர்மானம் தற்காலிகமாக அவர்களுக்கு நன்மை பயப்பதாய் இருந்தாலும், கடைசியில் தோல்வி அடையும் என்பதில் ஐயமில்லை. உலக வரலாறு இதை விளக்கியிருக்கிறது. எனவே, நெருக்கடியான இந்நேரத்தில் தகுந்த முறையில் அங்குள்ள அறிஞர்கள் வழிகாட்டுவார்களாக.

---

வெளியிட்டோர்: ம. பொ. சிவஞானம், 1-29, இருசப்ப கிராமணி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை. அச்சிட்டோர் திரு. கே. தி. நாகலிங்க முதலியார் செங்குந்த மித்திரன் அச்சகம் சென்னை, ஆசிரியர்: ம. பொ. சிவஞானம்

பதிவு எண். எம். 4803 "தமிழ் முரசு" 15, செப்டம்பர், 1947

# சிலப்பதிகாரமும் தமிழரும்

ஆசிரியர்:

ம. பொ. சிவஞானம்



"பண்டைய இலக்கியங்களை அரசியல் நோக்குடன் ஆராய்ந்து, அவற்றில் உள்ள இந்தக் காலத்திற்கு ஏற்றகருத்துக்களை மக்களுக்குப் பயன்படுமாறு செய்வதற்கு" இந்நூல் சரியான :: :: வழிகாட்டி. :: ::






விலை அணா
எட்டு

தியாகராயநகர்
சென்னை - 17

WRAPPER PRINTED AT THE SENGUNTHA MITHRAN PRESS, MADRAS 1